# திருமணம்

ஆசிரியர் :

**ரா. தணலன்**

※

※

**சத்தி பதிப்பகம்**

தபால் பெட்டி எண் **1684**

**சென்னை - 1**

முதல் பதிப்பு—பிப்ரவரி 1953

பதிப்புரிமை





'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'

அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக

மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு

அன்புடன் அளிக்கப்பட்டது.

**27–1–1979**

முத்துக்குமரன் அச்சகம்,

14-ஏ, குப்பையர் தெரு, சென்னை-1

# முகவுரை

திரைக்கதை வரிசையிலே ஆருவது நூலாகத் **திருமணம்** வெளி வருகிறது. அழகு நிலா, செல்வகுமாரி, அந்த இரவு, கானகத்திலே காதல் செம்மலர்கள் முதலியவை பிற நூல்கள்.

கதையை இன்னும் எவ்வளவோ விரிவாக எழுதியிருக்க முடியும். ஆனல் இந்தப் பணப் பஞ்ச காலத்திலே படிப்பவர்களின் வசதியை உத்தேசித்துக் கூடுமான வரை குறைந்த விலைக் குக் கொடுக்கவேண்டியிருப்பதால் மிகவும் சுருக்க வேண்டி வந்தது.

இதை அழகிய முறையிலே வெளியிட முன் வந்த **சத்திப் பதிப்பகத்**தாருக்கு நான் கடமைப் பட்டவன். இதைத் தமிழில் வெளியிடும் உரிமை அவர்களுடையது. வேறு விதத்தில் பயன்படுத்த விரும்புவவர்கள் ஆசிரியரின் முன் அனுமதி பெற வேண்டும்.

கடைசியாக இந்த அழகிய கதைக்கு இத்தனை அழகியதான முகப்பு வரைந்து கொடுத்த ஓவியர் திருச்சித் தோழர் ஈஸ்வரனைப் பற்றிக் குறிப்பிடா மல் இருக்க முடியவில்லை. திருமண ஓவியத்திலே அவர் கலை உலகை வென்று விட்டார், உணர்ச்சி பாவங்களைப் பிரதிபலிக்கும் இந்த அழகிய முகங் களைக் காணும் போது...ஓவியத்தின் கலைத்திறன் மிக்க முழு அமைப்பைக் காணும்போது நான் இந்தத் கதையை உருவாக்கினபோதடைந்ததைக் காட்டிலும் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழ் மன்றம்.<br>
சிங்கநல்லூர்.

**ரா. தணலன்.**

## ஆசிரியரின் இதர நூல்கள்

1. கானகத்திலே காதல்
2. நரக வாசலில்
3. வானம் பாடி
4. திருமணம்
5. அழகு நிலா
6. செல்வ குமாரி
7. பைத்தியக்காரனின் நாட்குறிப்புகள்
8. செம்மலர்கள்
9. கடவுள் முளைத்தார்
10. பாதாளபைரவி
11. அந்த இரவு
12. நடிகன்
13. அவள் எங்கே
14. அன்னியன்
15. பதில் கூறுங்கள்
16. லீலா ராணி
17. மருதையின் ஆவி
18. வாத்தியாரம்மா ?
19. அழகியின் ஆசை
20. ஆள்வோர் யார்
21. தாய்
22. வாழும் உரிமை
23. புரட்சித்தீயில்
24. படுகுழி
25. காமினியின் காதலர்கள்
26. அன்புக் கூடு
27. தியாக மூர்த்தி
28. குடும்ப வாழ்க்கை

# திருமணம்

## 1. கமலா

நான் நேற்றுவரை அப்பாவின் சின்னக் குழந்தையாக இருந்தேன்......!

ஆமாம். நான் நேற்றுவரை அப்பாவின் சின்னக் குழந்தையாக இருந்தேன் !!

ஏனோ என் மனம் என்னை அறியாமல் இந்த வார்த்தைகளைத் திரும்பத் திரும்பக் கூறிக்கொள்கிறது. எனக்கு என்னவோ போல் இருக்கிறது. உடம்பெல்லாம் புல்லரிப்பது போன்ற உணர்ச்சி. உள்ளம் கிறுகிறுக்கிறது. தென்றல் காற்றிலே மிதந்தேகும் சிறிய சருகுபோல் என் உள்ளமும் மெல்ல மெல்ல, மெல்ல மெல்ல மிதந்து செல்கிறது. என்னை அறியாமல் நானே சிரித்துக் கொள்கிறேனே என்னவோ......என் தங்கை விமலா சும்மா கேலி செய்கிறாள். அவளுக்கென்ன தெரியும்? விடலைப் பெண்தானே?

அப்பா தாயில்லாப் பெண்களாகிய எங்களிடம் எவ்வளவு பிரியமாக இருக்கிறார்? அவருடைய அன்புக்கு எந்த விதத்திலும் உவமை சொல்ல முடியாது என்றே நினைக்கிறேன். உண்மையில் எங்கள் அம்மா இருந்திருந்தால் அவளுக்கு எங்களிடம் இவ்வளவு அன்பிருக்குமா என்பது கூடச் சந்தேகம்தான், அம்மாவை

நினைக்கும்போது என் மனதில் எங்கிருந்தோ ஒரு ஏக்க உணர்ச்சி வந்து மோதுகிறது. அம்மா........அவள் முகம் எப்போதோ கனவில் கண்டாற்போல் என் நினைவுக்கு வருகிறது. அம்மா......என்னை இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு "நிலா நிலா வா வா...நில்லாமலே வா வா..." என்று பராக்குக் காட்டிப் பாலும் சோறும் ஊட்டிய அம்மா......! என் தலை சீவி, முகம் கழுவி முன் நெற்றிக்கு பொட்டும், கண்ணுக்கு மையும் இட்டு, பட்டு பாவாடையும் சொக்காயும் உடுத்தி, விதம் விதமாகச் சிங்காரித்து அழகு பார்த்து அள்ளி அணைத்து அகமகிழ்வுகொண்ட என் ஆசை அம்மா.......! அவளுக்கு நான் கொடுத்து வைக்கவில்லை! எனக்காவது அவ்வளவு கிடைத்தது. பாவம் விமலாவுக்கு அம்மாவின் முகம் கூட நினைவில் இருக்காது. அவளுக்கு ஒன்றரை வயது தானே.......அம்மா மணரமடையும் போது.......? ஐயோ. அம்மா.......அவளுக்கும் எங்கள் மேல் ரொம்பப் பிரியம்தான்! உண்மையில் அப்பாவும் அம்மாவும் இரண்டு பேரும் இருந்திருந்தால் இவர்களில் யார்எங்களிடம் அதிகம்பிரியமாக இருக்கிறார்கள்என்று கண்டுபிடிக்க முடியவே முடிந்திருக்காது. இரண்டு பேரும் அப்படி அன்புடையவர்களாக இருந்ததனால் தானோ என்னவோ தெய்வம் ஒருவரைப் பிரித்துத் தன்னிடம் எடுத்துக்கொண்டது. நான் நினைக்கிறேன். தெய்வம் என்பது ஒரு பொல்லாத பொறாமைப் பிண்டமாய் இருக்கவேண்டும்! அதற்கு மனிதர்கள் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்கப் பிடிக்காததுபோல் இருக்கிறது. மனிதர்களைத் துன்புறுத்தி அவர்கள் படாத பாடு பட்டுத் துடித்துச் சாவதைப் பார்ப்பதில்தான் அதற்கு ஆனந்தம் இருக்கும் போலும்!

தாயில்லாக் குழந்தைகள் என்று பெயர் தான். எங்கள் வாழ்க்கையிலே தாயின் இடம் சூனியமாகி விட்டால் கூட அதைத் தவிர வேறு ஒரு குறையும் காணுது நாங்கள் வளர்க்கப்பட்டோம். எங்களுக்கு வாய்த்தது போல் ஒரு அப்பா உலகத்தில் வேறெந்தக் குழந்தைக்குமே வாய்த்திருக்கமுடியாது என்றுதான் நான்நினைக்கிறேன். அப்பா எங்களுக்கு அப்பாவாக மாத்திரம் இருக்கவில்லை. அம்மாவாகவும், தங்கை யாகவும் தமக்கையாகவும் தோழியாகவும் சிநேகிதையாகவும் கூட இருந்தார். நாங்கள் அப்பாவிடம் படித்தோம். பாடினேம், சிரித்தோம், களித்தோம், சாப்பிட்டோம், பேசினேம், எங்கள் இன்பத்திலும் துன்பத்திலும் எல்லாவற்றிலும் அப்பா எங்களோடு பங்கு கொண்டிருந்தார்.

அந்த வரையில் நானும் விமலாவும் பாக்யசாலிகள் தான். இன்று வரை எங்கள் வாழ்க்கையோடு ஒன்றிப் போய், எந்த விதத்திலும் பிரித்துணர முடியாதவராக இருந்த அப்பா......இன்று? எனக்கு மாத்திரம்.......? —எனக்கு என்னவோபோல் இருக்கிறது. அப்பாவின் அன்பு மறக்க முடியாததுதான்........ஆனல்.......?

என் உள்ளம் ஏன் இப்படித் தடுமாறுகிறது? எனக்கு எல்லாம் அளித்து சல்லபமாக இருந்த அப்பா.......என்னிடத்தில் எல்லையற்ற அன்பை அள்ளிச் சொரிகிற அப்பா.......என் உள்ளம் அந்த அன்புடன் திருப்தி அடைவதாக இல்லை. வேறு எதையோ நாடி அலைகிறது. எங்கெங்கோ இழுத்துச்செல்கிறது.

புத்தகத்தில் படித்த அந்த வாக்கியம் என் நினைவுக்கு வருகிறது. "பருவம் அடைந்த பெண்ணிற்குத்

தேவை அப்பா அல்ல........அம்மா........ஒரு கணவன்" என்று மணமாகாமல் மனம் புழுங்கிக்கொண்டிருக்கும் அந்தப் பெண் தன் தாயிடம் ஒரு நாள் வாய்விட்டுக் கூறிவிடுகிருள்......மண்ணிலே முளைத்தசெடி சூரியனை நோக்கித் தன் ஆயிரம் கரங்களை நீட்டிப் படர்வதைப் போல் பெண்ணின் உள்ளமும் பெற்றவர்கள் இடத்திலிருந்து பிறிதோர் இடத்தை நோக்கிப் படர்ந்து படர்ந்து செல்லும்போலும்.......! நான் இந்தச் சில நாட்களுக்குள் எவ்வளவுமாற்றம் அடைந்துவிட்டேன்! எவ்வளவு சாதனக்காரி ஆகிவிட்டேன்! அப்பாவிடம் எதையும் ஒளித்துவைக்கும் பழக்கம் இல்லாதவளாகிய நான் எவ்வளவு மறைத்துவைக்க ஆரம்பித்து விட்டேன். ஒவ்வொரு சமயங்களில் என் உள்ளம் 'சீ நன்றியற்றவளே........இதுதானு நீ உன் தந்தைக்குச் செய்யும் கைமாறு' என்று இடித்துக்காட்டுகிறது. ஆனல்........ ஆனல்.... எனக்கு வெட்கமாகயிருக்கிறது. இது என் தவறல்ல........பருவத்தின் தவறுதான்.... !!

அது சரியா தவரு என்று எனக்குப் புரியவில்லை. வாலிபன் ஒருவனும் மங்கை ஒருத்தியும் பிறர் அறியா வண்ணம் காதல் புரிவது உலகோரால் பரிகசிக்கப்படுகிறது. கள்ளக் காதலர்களைப் பற்றி எவ்வளவு கீழ்த்தரமாகப் பேசப்படுகிறது என்பது எனக்குத் தெரியும் ஆனல்.......என்னல் காதலிக்காமல் இருக்க முடியவில்லையே....? பசியும்தாகமும் எவ்வளவு இயற்கையாக எழும் உணர்ச்சிகளாக இருக்கின்றன. அவற்றை மறைத்துவைக்கவோ சகித்துக் கொள்ளவோ முடிகிறதா.......? என் வரையில் காதலும் அப்படிப்பட்டதுதான் என்று நினைக்கிறேன்.

காதல் புரிவதற்காகத்தானே கல்யாணம் செய்து வைக்கிறார்கள். பத்துப்பேர் அறியப்பந்தல் வாயிலிலே மணமக்கள் ஆக்கப்பட்டபின்தான் காதல் வரவேண்டும் என்பது சட்டம்போலும். ஆனால் பசியும் தாகமும் எப்படி எந்தச்சட்டத்திற்கும் கட்டுப்பட்டன அல்லவோ அதே போல்தான் காதலும் என்று நினைக்கிறேன். அதுவும் இயற்கையாகவே, யாரையும்கேளாமலே வந்து விடுகிறது.

எனக்கு மணமாகவில்லை. மணம் செய்து கொடுக்கப் பட்டபின், என் மணாளரைக் காதலிப்பதுதான் நியாயம் என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் என் உள்ளத்திலே எழும்இயற்கையான உணர்ச்சிகளை என்னால் தடுத்துக்கொள்ளமுடியவில்லையே! வெள்ளம் வந்தபின் அணைபோடுவதைப் பற்றி யோசனை செய்வதால் என்ன பயன்?

ஒரு பெண் பல ஆடவர்களை நாடுவதையோ, மோகவெறி பிடித்தலைவதையோ குற்றம் என்று கூறலாமா, இருக்கலாம். ஆனால், உள்ளமும் உணர்வும் ஒன்றைத்தான் விரும்புகிற ஒருவனைக்காதலிப்பதில்.... மணாளனாக அடைய முயல்வதில் என்ன தவறு இருக்கக்கூடும்?

கல்யாணம் ஆனபின் காதலிப்பது என்பது........ கட்டிலுக்கேற்றபடி ஆளைப்பிடிப்பது என்பதுபோல் இல்லையா? அதைவிட ஆளுக்கேற்ற கட்டிலாக இருந்தால்.......காதலும் கல்யாணமும் இணைந்து வருவதாக இருந்தால்.......

எனக்குக் கொஞ்ச நாளாகப் பைத்தியம் பிடித்து விட்டாற்போல் இருக்கிறது. விமலாவும் அப்படித்தான்

சொல்கிருள். ஜன்னல் அருகே உட்கார்ந்துகொண்டு இப்படி எதையாவது நினைத்து நினைத்துப் பொழுதைப் போக்குவது என் வழக்கமாகி விட்டது. எதையாவது நினைத்துக் கொண்டிருக்கமாத்திரமா, நான் இங்கு உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். அவர் வருவார்........ கண்டிப்பாக வருவார். ஒரு நாளைக்கு நாலைந்து தடவையாவது இப்படியும் அப்படியும் நடந்து செல்வார். ஆனல் வழிந்து பொங்கும் அவருடைய அழகிய முகத்தைப் பார்ப்பதற்காகத்தான் நான் இங்கே அமர்ந்து தவம் கிடக்கிறேன், ஐயோ........நான் எவ்வளவு பொல்லாதவளாகி விட்டேன்!

அவர் அடிக்கடி அப்பாவிடம் வருவார். அதிலும் நானும் விமலாவும் மாலைநேரங்களில் வீணையை எடுத்து வைத்துக்கொண்டு பாட உட்கார்ந்துவிட்டால்........எங்கள் பாட்டு முடியும் வரை அவர் இங்கேயேதான் இருப்பார். நாங்கள் எல்லோருக்கும் தெரிகிற மாதிரியில் மிக வெளிப்படையான நண்பர்களாகவே இருந்த போதிலும்கூட உள்ளத்தில்நாங்கள் எப்படிஎப்படியோ மாறிவிட்டோம்......! காதலர்களாகி விட்டோம்.......!!

இது ஏன் இப்படி நடந்தது என்பதுதான் எனக்குப் புரியவில்லை. அவரை ஆரம்ப முதலே எனக்குப் பிடித்திருந்தது. தோற்றத்தில் மாத்திரம் அல்ல. குணத்திலும் கூடத்தான். வேறு எத்தனையோ பேர்களையும் கூடத்தான் எனக்குத் தெரியும், ஆனல் எப்படி என்று என்னல் சொல்லமுடியவில்லை. ரகு என் ஆசைக் காதலன். அருமைக் கண்ணளன்! அவரைப் பிரிந்து என்னல் இருக்கமுடியாது. ஒருநாள் அவரைப்

பார்க்காவிட்டால் அந்த நாள் நான் உயிருடன் இருந்தும் இல்லாத நாள் தான்!

ஆனல், குழப்பமான சிந்தைகளும் கவலைகளும் சந்தேகங்களும் எப்பொழுதும்தான் உள்ளத்தில் வந்து மோதுகின்றன. அவற்றிற்கு வேளையும் காலமும் தெரிகிறதா என்ன? எங்கள் காதல் கை கூடாவிட்டால் அவர் கூறுகிறபடி நாங்களும் ஒரு லைலாவும் மஜ்னுவும் ஆகி விடுவோமா.......? நான் ஒரு ஜாதி! அவர் ஒரு ஜாதி! அப்படி எல்லாம் நடக்காது. அப்பா என் மனம் நோக ஒன்றும் செய்ய மாட்டார். அவருடைய தந்தை பெரிய சீர்திருத்தவாதியாம். ரகு என்னைக் கைவிட மாட்டார்......! என்னைக் கைவிடவே மாட்டார்!!

ஏனோ என் உள்ளம் சஞ்சலம் அடைகிறது. பேதைப்பெண்ணே......உனக்கு என்ன இல்லாமல் கிடக்கிறது? எல்லாம் இருந்தும் ஏதும் இல்லாதவள் போல் ஏன் இப்படித் தவிக்கிறாய்?

* * *

## 2. ரகுநாதன்

என் உள்ளம் தவி தவிக்கிறது. எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. சங்கங்களிலும் சபைகளிலும் சண்டப் பிரசண்டம்செய்கிற என் தந்தை உள்ளே இப்படி இருப்பார் என்று நான் கனவில்கூட கருதியதில்லை. கொஞ்சநாட்களுக்கு முன்னல் அவர் முற்போக்கு வாலிபக் கழகத்திலே நிகழ்த்திய பிரசங்கம் இப்பொழுது கூட என் காதுகளில் எதிரொலிக்கிறது. "மனிதர் யாவரும் ஒரு இனம், ஒரு குலம், ஒரு நிலை,

ஒரு நிறை.......என்பதற்குமாறுத விஞ்ஞான, பௌதிக, உடல், உள ஆராய்ச்சி நூல்களிலிருந்து ஒரு சான்றுவது கூற முடியுமா.......அப்படியிருக்க சாதி, சமயம், குலம், வருணம் என்ற பேதமிட்டு மனிதரை மனிதர் பிரித்து வைக்கும் மடமையை நாம் இன்னும் அனுமதித்துக் கொண்டிருப்பது நன்றாக இருக்கிறதா ......சிந்தித்துப் பாருங்கள்........" என்று அவர் ஆவேசமாகக் கேட்டபோது கூடியிருந்த இளைஞர்கள் மடமடவென்று கைதட்டி ஆரவாரம்செய்தனர். என் உள்ளத்திலோ ஆனந்தம் பொங்கிவழிந்துகொண்டிருந்தது. துள்ளிக்குதிப்பது ஒன்றுதான் பாக்கி. ஆரவாரத்துடன் நானு அவர் பேச்சை ரசித்துக்கொண்டிருந்தேன். இனிக் கமலாவை அடைவதில் எனக்கு ஒரு தடையும் இருக்காது என்று நான் பகற்கனவு கண்டு கொண்டிருந்தேன்.

கமலாவும் நானும் அதே வாலிபர் சங்கக்கட்டிடத்தில், அதே தலைவரின் முன்னிலையில் மாலை மாற்றித் திருமணம் செய்து கொள்வது போலவும் எங்களை வாழ்த்தி என் தந்தை பேசுவது போலவும் கூட என் கண் முன்னே நினைவுப்படங்கள் சுழன்று கொண்டிருந்தன. நான் என்னை மறந்து 'கமலி.... கமலி....' என்று சொல்லிக் கொண்டிருந்தேன். என் நண்பன் கையைப் பிடித்து இழுத்த போதுதான் எனக்கு நினைவு வந்தது.

சிறிது நேரத்திற்குள் நான் என்னென்ன மனக் கோட்டைகள் கட்டி விட்டேன். எத்தனை கற்பனைகள் செய்து விட்டேன். என் தந்தை, என் நலத்திலே அக்கறைகொண்டு, என்னைப் பெரிய மனிதன் ஆக்க

வேண்டும் என்று தம் சக்திக்கும் மீறி என்னைப் பட்டணத்திற்கு அனுப்பிப் படிக்க வைத்த என் தந்தை...எதற்கெடுத்தாலும்......' நம்ம ரகு இருக்கிறானே... பி. ஏ-லே பஸ்ட் கிளாஸிலே பாஸ்செய்துவிட்டான். கவர்னது அவனைப் புகழ்ந்து பேசி இருக்கிறார். படிப்பு என்றால் எல்லோருக்கும் வந்து விடுமா ஐயா...! என்று சும்மாவாவது சொல்லிச் சொல்லி என்னைப்பெருமைப் படுத்தித்தான் மகிழ்வு கண்ட என் தந்தை...என் விருப்பத்திற்கு மாறாக எதுவுமே சொல்ல மாட்டார் என்று மனப்பால் குடித்தேன். கமலாவிடம் நான் எவ்வளவு நம்பிக்கையுடன் கூறினேன்! ஐயோ அவள் உள்ளத்திலே குளிர்ந்து விட்ட நம்பிக்கைப் பயிரை என் கையால் நான் எப்படிப் பிடுங்கி எறிவேன்?

கூட்டத்திலே அவர் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டபோது உண்மையில் நம் தந்தைதான் பேசுகிறாரா என்று எனக்கும் சந்தேகமாக இருந்தது. இவ்வளவு விரைவில் இவ்வளவு பெரிய சீர்திருத்த வாதியாக இவர் எப்படி மாறிவிட்டார் என்று நான் சந்தேகித்தேன். "இப்பொழுதல்லவா புரிகிறது? அப்பாவுக்கு தான் பெரிய மனிதன் என்று பெயர் பெற வேண்டும் என்பதிலே பெரிய ஆசை! அந்த ஆசை ரொம்ப காலமாக அவர் உள்ளத்தில் பதிந்து கொண்டிருக்கிறது. அவர் செய்கிற ஒவ்வொரு காரியத்திலுமே அந்த ஆசை பிரதி பலிக்கக் காணலாம். எதற்கெடுத்தாலும் என்னை இழுத்துவைத்துப் பெருமை படுத்திப் பேசுவதுகூட இந்தப்புகழ் மோகம் காரணமாகத்தான் ஆம்........ஆரம்பத்திலிருந்தே அவரை எனக்கு நன்றா

கத் தெரியும். பொதுக் கூட்டத்திலே அவர் பேசியதைக் கேட்டு அவர் சீர்த்திருத்த வாதியாகி விட்டார் என்று நினைத்தது என் பைத்தியக் காரத்தனம். கடவுளே நான் என்ன செய்வேன்? கமலாவைப் பிரிந்து......அதைப்பற்றி என்னல் நினைக்கக் கூட முடியாது. கனவில் கூட நினைக்க முடியாது.

என் தந்தை அனுமதிப்பார் என்று நினைத்து நான் அவளைக்காதலிக்கவில்லை. கமலா என் இளமைக் கனவுகளின் இன்பலட்சியமாக இருந்ததனுலேயே காதலித்தேன்! என் வாழ்க்கைப் பொழிலுக்கு வனப்பளிக்கும் வண்ண மலராகத் திகழ்வாள் என்றதனுலேயே காதலித்தேன். கமலா.......எனக்குப் பாலையிலே குளிர் சோலை, பாழ் இருளிலே தெரியும் சுடர் விளக்கு..........அலை நடுவே கிடைத்த தெப்பம்..........ஆமாம்........கமலா என் வாழ்க்கைக்கு லட்சியம். கற்பனைகளுக்கு உருவம். எதிர் காலத்தின் விழித்துணை.... அந்த அன்புக் காதலிலே என் உள்ளம் எப்படி எல்லாம் கற்பனை செய்கிறது. கமலாவை நான் எதனுலும் இழக்க முடியாது. எதற்காகவும் இழக்க முடியாது.

ஆனுல் உண்மையில் அப்பாவின் பேச்சைக் கேட்டபோது அவர் எங்கள் திருமணத்திற்குச் சம்மதித்து விட்டதாகவே நினைத்து விட்டேன், அதனுலேயே ஏமாந்துவிட்டேன். விளாம்பழம் நல்லதென்று நினைத்து நாவில் நீர் ஊற உடைக்க, அதன் நடுவே புழுக்கள் நெளியக் கண்டதைப்போல் ஆயிற்று என் நிலை! அப்பா பெரிய இடத்தில் எனக்குப் பெண் பேசப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். நான் எந்த இடத்திலுமே எனக்குப் பெண் பார்க்கவேண்டிய அவ

சியம் இல்லை என்றேன். 'ஏண்டா சந்நியாசியாகவே இருந்துவிடப் போகிறாயா?" என்று கேட்டார் அப்பா ......நான் சிரித்தேன். உனக்கு ஒன்றும் தெரியாது. எல்லாம் காலா காலத்தில் எதை எதைச் செய்யவேண்டுமோ........அதை அதைச் செய்துதான் ஆகவேண்டும். உத்தியோகம் கித்தியோகம் எல்லாம் பிறகு தானுக வந்து விடும்' என்று கூறிக்கொண்டே அவர் கிளம்பி விட்டார். ஆண் பிள்ளையாக இருந்தும் எனக்கு 'ஒரு மாதிரி' யாகத்தான் இருந்தது, "அப்பா வேறு பெண் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை" என்றேன்,

"அப்படியானுல் நீயே பார்த்து முடிவு செய்து கொண்டாயா?"

'ஆமாம்' என்பது போல் தலையை அசைத்தேன் நான்.

"நீ புத்திசாலி என்று நினைத்தேன். உன் வயதுப் பையன்களுக்கு இதைப்போன்ற விஷயங்களில் எல்லாம் அனுபவம் இருக்காது, காதல் என்றும் லட்சியம் என்றும் கன்னு பின்னுவென்று உளறிக் கொண்டு கண்டதை நினைத்துக்கொண்டு திரிவார்கள் அவை பேச அழகாக இருக்கலாம். எழுதவும் படிக்கவும் நன்ருக இருக்கலாம். ஆனுல் காரியத்தில் உதவாது......"

"அப்பா பெண் எல்லா விதத்திலும் உங்களுக்குப் பிடித்தமான விதத்தில் இருப்பாள். நல்ல குடும்பம், பணக்காரி படித்தவள், அழகானவள். அவர் வீட்டில் இரண்டு பெண்கள் தான். வேறு ஆண் குழந்தைகள் கிடையாது......"

"அப்பா சந்தேகத்துடன் கேட்டார், எந்த ஊர்..."

"இதே ஊர்தான்........"

"இந்த ஊரில் எனக்குத் தெரிய அப்படிப்பட்ட பெண் ஒன்றும் இல்லையே........"

"ஏன் அப்பா........முதலியாரின் பெண் கமலா?

நான் ஆவலுடன் கூறினேன். ஆனல் அப்பாவின் முகம் பயங்கரமாக மாறியதைப் பார்த்தவுடனேயே என் இதயம் அடியோடு கலங்கி விட்டது. வானம் அளாவக் கட்டிய மாளிகை அப்படியே உருக் குலைந்து விழுவதுபோல் என் கற்பனை மாளிகைகளும் தகர்ந்து விழுந்தன. இருந்தும் நான் நம்பிக்கையோடு அவர் முகத்தைப் பார்த்துக்கொண்டு நின்றேன். அவர் ஆத்திரத்துடன் "முட்டாள் தனமாக எதையாது சொல்லிக் கொண்டிராதே........அதெல்லாம் நடைபெறுது......" என்று சொல்லிவிட்டு விர்ரென்று போய்விட்டார். நான் ஏக்கத்துடன், 'அப்பா........அப்பா" என்று கூப்பிட்டேன். ஆனல், அறுப்பவன்செவியில் ஆட்டின் அவலக் குரல் ஏறுவதுண்டா........? என் தந்தை போய் விட்டார்.

இங்கே வீடு அமளிப் படுகிறது. காரிலே சம்மந்திகள் இருக்கின்றனர். அவர்களுடன் அந்தப் பெண்ணையும் அழைத்துக்கொண்டு வந்திருந்தார்கள். பெண்ணின் அழகைப்பார்த்தால் நான் கமலாவை மறந்து விடுவேன் என்பது அப்பாவின் நினைப்புப் போலும். வாழைக் குலையைப் பார்த்து அழுகிற குழந்தைக்கு எந்தப் பழத்தைப் பிடுங்கிக்கொடுத்தால்தான் என்ன? பெரியவர்கள் காதலைப்பற்றி இப்படித்தான் நினைக்கிறார்களா? ஆணின் தேவை.......பெண்! ஆண் ஒரு

இயந்திரம் பெண் ஒரு இயந்திரம்........இப்படித்தான் இவர்கள் நினைக்கிருர்களா? என் மனம் புழுங்குகிறது.

கமலாவுக்கு என் முகம் சிறிது சோர்ந்திருப்பதை பார்த்தாலே சந்தேகம் வந்து விடுகிறது. இரண்டு நாட்களுக்கு என் மனம் சிறிது ஆறுதலடைகிறவரை அவளைப் பார்க்கக்கூடாது என்று நினைத்தேன். ஆனல்........அவளைப்பார்க்காமல் இருக்கமுடிகிறதா....? காந்தஊசி வடக்கு திசையையே காட்டுவதுபோல் என் உள்ளமும் எப்பொழுதும் கமலாஇருக்கும்இடத்தையே அல்லவா காட்டிக் கொண்டிருக்கிறது. ஆங்கிலப் பிரயாணி ஒருவன் ஆப்ரிக்கா சுதேசிகளிடம் அகபட்டுக் கொண்டபோது அவர்கள் அவன் கையிலிருந்த திசை காட்டும் கருவியைப் பிடுங்கிக் கொண்டார்களாம். அதை எப்படி எப்படித் திரும்பினலும் முள் ஒரே திசையில் நிற்பதைக் கண்டு அது என் அம்மா இருக்குமிடத்தைக் காட்டுகிறது என்று சொன்னனம். என் கையிலும் ஒரு திசை காட்டும் கருவி இருந்தால்.......

கமலா என்றும் இல்லாதபடி அவ்வளவு நன்ருக அலங்கரித்துக் கொண்டிருந்தாள். அந்த அழகைக் கண் குளிரப் பார்க்கக் கூட என்னல் முடியவில்லை. "ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்? என்னிடம் சொல்லமாட்டீர்களா........என்று துருவித் துருவிக் கேட்க ஆரம்பித்துவிட்டாள். சொன்னலும் சங்கடம், சொல்லாவிட்டாலும் சங்கடம். எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. எப்படி இருந்தாலும் அவளுக்குத் தெரியவேண்டிய விஷயந்தானே என்று நினைத்து ஒருவாருகச்சுற்றி வளைத்து மெதுவாக விஷயத்தைச் சொன்னேன்—பெண்களின் இதயம் மெழு

கைக் காட்டிலும் மிக மிருதுவான பொருளில் செய்யப் பட்டிருக்கவேண்டும் ! ஒன்றைக்கேட்டவுடனே அவர் கள் கண்களில் எப்படிக் கண்ணீர் வந்து விடுகிறது ? கமலா விம்ம ஆரம்பித்து விட்டாள். அவளை ஆறுத லடையச் செய்வதற்குள் எனக்குப் போதும் போது மென்றாகி விட்டது ரொம்ப நேரமாகி விட்டது. அதற்குள்........கமலாவின் தந்தை வந்து விட்டார். எனக்குப் பகீர் என்றாய் விட்டது. நான் என்ன செய் வேன் ? அவர் நம்பிக்கையுடன் என்னைத் தன் வீட்டில் கலந்து பழக விட்டிருந்தார். ஆனால் நான்...

செய்யவொண்ணாத துரோகத்தைச் செய்து விட் டதுபோல என் உள்ளம் நடுநடுங்க ஆரம்பித்து விட் டது. அவ்வளவு காலமும் நான் சேகரித்து வைத் திருந்த தைரியம் எல்லாம் நான் எதிர்பார்த்திருந்த அந்தச் சமயத்திற்குதவாமல் பறந்து போய்விட்டது. நான் நடுங்கிக்கொண் டிருந்திருக்கவேண்டும். அவர் மௌனமாக எங்கள் அருகே வந்து, “ கமலா....நேர மாக வில்லையா.......போய்க்கொஞ்ச நேரம் பயிற்சி செய்து கொண்டிரு அம்மா ” என்று கூறினர். கமலா முன்னால் சென்றாள். “ ரகுவா...” என்று கூறி விட்டு அவர் நடந்தார். அவர் குரல் கரகரத்தது. அவர் என்னைப்பார்க்கவே இல்லை.

கமலாவும் விமலாவும் வீணை வாசித்துப் பாடிக் கொண்டிருந்தனர். நான் எந்த உலகத்திலோ இருந் தேன். கமலாவும் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும், என்னால் கவனிக்க முடியவில்லை. என் கால்களின் கீழ் இருந்து பூமி நழுவிக்கொண்டிருப் பதுபோல் எனக்குத் தோன்றிக் கொண்டிருந்தது.

பாட்டின் இடையிலேயே, "சரி போதும் அம்மா" என்றார் அவர். அவர் குரல்கடினமாக இருந்தது. நான் கமலாவைப் பார்த்தேன். வீணையின் மேல்........முத்து முத்தாகக் கண்ணீர்த்துளிகள். என் இதயம் பிளந்து விடும்போல் இருந்தது. நான் என்ன நிலையில் இருந் தேன் என்பது எனக்குப் புரியவில்லை. நான் அவ ரிடம் ஏதோ சொல்லிக்கொண் டிருந்தேன். 'தவறு என்னுடையதுதான் அவள்மேல் கோபிக்காதீர்கள்' என்று சொல்லியிருப்பேன் என்று நினைக்கிறேன். கமலா அவர் கால்களைப் பிடித்துக்கொண்டு விம்மிய தும், விமலா ஒன்றும் புரியாமல் விழித்துக்கொண்டு நின்றதும் என் நினைவில் விழுந்தன.

அவர் என் தோளைப்பிடித்து மெதுவாக அசைத்து, "ரகு...நான் யார் மேலும் குற்றம் சுமத்த வில்லை. ஆனால் சமுதாயம் மிகக்கொடுமையானது...... மிகமிகக் கொடுமையானது. அதை எதிர்த்து நிற்க யாராலும் முடியாது..." என்றார். நான் என்ன சொன் னேன் என்பது என் நினைவுக்கு வரவில்லை. கமலாவை விட்டு வாழ்வதை விடச்சாவதையே விரும்புகிறேன். என்று ஏதாவது சொல்லியிருப்பேன் என்று நினைக் கிறேன். கமலாவும் அப்படித்தான் ஏதோ சொன் னாள். அவர் நெடுநேரம் யோசனை செய்து கொண்டே நின்றார். பிறகு.... "ரகு....கமலா....நான் உங்களுக்கு நல்லது தான் செய்வேன். எனக்குத் தெரியாமல் நீங்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கக்கூடாது. எந்த வித மான தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது. கடி தத்தின் மூலமாகக்கூட நான்........என்னால் முடிந்த வரை...உங்களுக்கு நல்லது தான் செய்வேன்" என்றார்.

நான் எப்படி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டேன் என்பது எனக்கே தெரியவில்லை. அவள் விம்மிக்கொண்டிருந்த தம்மகளை மார்மேல் சாய்த்துக்கொண்டு அவள் தலையை வருடியவாறு, "அம்மா ..நீ என் குழந்தை....என் குழந்தைதான் நீ" என்று சொல்லிக் கொண்டிருந்தார் ! — எவ்வளவு உருக்கமாக அவர் அந்த வார்த்தைகளைக் கூறினர் ? அவர் முகம் அன்பாய் எவ்வளவு கனிந்திருந்தது. என்னுல் அந்தக் காட்சியை மறக்கவே முடியாது.......! அவரும் ஒரு தந்தைதான் என்று நினைக்கும் பொழுது ............!

* * *

## 3. மாணிக்க முதலியார்

"அவரும் ஒரு தந்தைதான்...." என்று நினைக்கும்பொழுதுதான் எனக்கு இந்தத் துணிவு வருகிறது. ஆமாம்....என்னுடைய நிலையில் நான் இப்பொழுது வேறு என்ன செய்ய முடியும் ?

நான் ஒரு பெண்ணுக இருந்திருந்தால்.......என் குழந்தைகளுக்கு எந்தக் காலத்தில் எதுதேவை என்பதை என்னுல் புரிந்து கொண்டிருக்க முடியும். நானே ....என்னுடைய அன்பின் மிகுதியில் அவர்களை எப்பொழுதும் என் சின்னக் குழந்தைகளாகவே நினைத்துக்கொண்டிருந்து விட்டேன். தன் பெண்களுக்கு அழகிய ஆடைகள், ஆபரணங்கள் வாங்கிக்கொடுத்து விடுவதோடும், படிக்கவும் பாடவும் வைப்பதோடும் ஒரு தந்தையின் கடமை முடிந்து போவதில்லை. ஒரு தந்தை தன் அன்பு முழுவதையும் அவர்கள்மேல்

சொரிவதாலும் அவர்கள் வாழ்க்கை நிறைந்து விடுவதில்லை....உரிய காலத்தில் அவர்களுக்கு மணம் செய்து வைப்பதும் — அதனால் அவர் தன் அன்புக்குழந்தைகளைப் பிரிய நேரிட்டாலும்—அவசியம் தான்.

இந்தத் துன்பகரமான உண்மையை நான் அடியோடு புரிந்து கொள்ளவில்லை நான் அதைப்பற்றிச் சிந்தித்ததுண்டு. ஆனால் அக்கரையுடன் கவனிக்கவில்லை. என் மகளின் பண்பில் ஏற்பட்ட சிறு மாற்றங்களைக்கூட நான் கவனியாமல் விட்டு விட்டேன்.

கமலா....என் கண்களிலே ஆடித்திரிந்த சிறு குழந்தையாய், ஓடி நகைத்துவரும் சிறு மதலையாய்த் தான் தோன்றிக் கொண்டிருந்தாள். ஆனால், அன்று......?

அவள் என்னைவிட அதிகமாக வேறொருவரை நேசிக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. பருவத்தின் ரகசிய உணர்ச்சிகள், ஒரு தந்தையிடம் கூட வாய்விட்டுக் கூற முடியாதவை என்று நான் நினைக்கவில்லை. அது என் தவறுதான். நான் தந்தை.... மலர் தன் முழு எழிலும் மணமும் காட்டி வண்டை நோக்கி ஆடி மகிழ் வதைக்கண்டு செடி பொறுமைப் படுவதில் அர்த்தமில்லை. ஆமாம், நான் அப்படித் தான் நினைக்கிறேன். அது அவள் தவறல்ல. ரகுவின் தவறும் அல்ல,

ரகு நல்லவன். உத்தம குணம் உள்ள இளைஞன். இனிய பண்புடையவன். கமலாவின் உள்ளம் அவனை நாடியதில் அதிசயப் பட ஒன்றும் இல்லை....அவனும் கமலாவின்மேல் ஆசையாக இருக்கிறான். ஆனால்....?

இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த சமுதாயம் தன் குழந்தைகளுக்கு வாழ்வளிப்பதாக இல்லையே....? ராமகிருஷ்ணபிள்ளை என்ன நினைப்பார்?

அவருக்கு எப்பொழுதுமே என்னைக்கண்டால் பிடிக்காது. ஏனோ...எனக்கே தெரியவில்லை, எந்த விஷயத்திலுமே நாங்கள் இருவரும் ஒத்துப்போக முடிந்ததில்லை. அதனால் நாம் கூடியவரை ஒதுங்கிப் போனால்கூட வேண்டுமென்றே நம்மிடம் வம்புக்கு வருவார். அப்படிப்பட்ட மனிதர் இந்தத் திருமணத் திற்குச் சம்மதிக்கவா போகிறார்? நான் நம்பவில்லை.

ரகுவையும் கமலாவையும் ஒருவரை ஒருவர் சந்திக்கக் கூடாதென்று தடுத்து வைத்திருக்கிறேன். ஆனால், பிரித்து வைப்பதால் காதல் அதிகமாவதைத் தவிரக் குறைந்து விட்டதாக எந்தக் காவியமும் கூற வில்லையே....? அவர்கள் ஒருவரை ஒருவர் மறந்து விட வேண்டியதுதான் என்று இறுதியாகக் கூறிவிடலாம். ஆனால்....என்னால் அப்படி நினைக்க முடியவில்லை. எந்தக் குழந்தைகளுடைய வாழ்க்கை வளமடைவதற் காக என் வாழ்க்கையையே அர்ப்பணித்துக் கொண் டேனோ அதே குழந்தைகளின் வாழ்க்கையை என் கையாலேயே முறித்து விடுவதா....? அது என்னால் முடியாது. முடியவே முடியாது.

எனக்கு வேறு வழி ஒன்றும் தோன்றாத தாலேயே ராமகிருஷ்ண பிள்ளையின் வீட்டை நோக்கி நடந்தேன். நேர்மையாக நேருக்கு நேர் அவரிடம் கேட்டு, ஒரு முடிவுக்கு வருவதைவிட வேறு நல்ல வழி இருக்க முடியுமா? அவரும் பெரிய சீர்திருத்த வாதி என்று பெயர் பெற்றவர். நாங்கள் வேறு வேறு

ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்பதால் எங்கள் குழந்தைகளின் வாழ்க்கையையும் ஏன் பாழ்படுத்த வேண்டும்? ராமகிருஷ்ண பிள்ளை சாதி சமயம் பார்க்கமாட்டார். அவர்தான் சீர் திருத்த வாதியாயிற்றே என்றெல்லாம் நினைத்துக்கொண்டுதான் சென்றேன்.

நல்லவேளை மனிதர் வீட்டில்தான் இருந்தார். வேறு யாரும் இருந்ததாகவும் தெரியவில்லை. நல்ல சமயம் என்று நினைத்தேன். பிள்ளை என்னை வரவேற்றார். அந்த வரவேற்பே என்னைத் தூக்கி வாரிப் போட்டது — "வாங்கோ முதலியார்வாள் வாங்கோ.... நானும் உங்களைப் பார்க்கவேண்டும் என்றுதான் நினைத்தேன். நீங்களே வந்து விட்டீர்கள். நல்லதாகப் போயிற்று....

"நானும் உங்களைப் பார்க்கவேண்டும் என்றுதான் வந்தேன்.

"சரிதான். நீங்கள் பெரிய மனிதர், படித்தவர். பணக்காரர். ஊரிலே மட்டும் மரியாதையும் உள்ளவர், நீங்கள் இப்படி நடக்க விடலாமா?....எனக்கு உள்ளது ஒரு மகன் தானய்யா....உங்களுக்காவது பெண்கள் இரண்டுபேர் இருக்கிறார்கள்....! எனக்கு உள்ளவன் ஒரு மகன் தானே....?

பிள்ளை கம்பீரமான குரலில் இரைந்தார். எனக்கு என்ன பதில் சொல்வதென்று தோன்றவில்லை. மிகவும் கஷ்டப்பட்டுச் சமாளித்துக்கொண்டு, "நான் உங்கள் மகனை அபகரித்துவிட வரவில்லை...." என்றேன். பிள்ளையின் குரல் உச்சஸ்தாயியை எட்டிற்று, பின் இதற்கு என்ன அர்த்தம். அவன்

வீட்டிலே தங்குவதில்லை. நான் சொன்ன சொல்லைத் தட்டாதவன் இன்று என்னையே எதிர்த்துப் பேசுகிறான். உங்களுக்கு இஷ்டமில்லையானால் வீட்டை விட்டே போய் விடுகிறேன் என்கிறான். நான் என்னய்யா செய்யட்டும்? நான் அவனை எவ்வளவு பாடு பட்டு வளர்த்திருப்பேன். எவ்வளவு கஷ்டப்பட்டுப் படிக்க வைத்திருப்பேன். அவனை என்ன நிலைமைக்குக் கொண்டுவரவேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்? உமக்கு ஏதாவது தெரியுமா ஐயா....? நீங்களும் ஒரு பையனைப் பெற்றிருந்தால் தெரியும். உமக்கிருப்பவை பெண்கள் தானே....? உங்களுக்கு எப்படித் தெரியப் போகிறது.....

ராமகிருஷ்ண பிள்ளை அப்படி அவமதிக்கும் குரலில் பேசிக்கொண்டு போவது எனக்குப் பிடிக்கவில்லை. உள்ளுக்குள் எவ்வளவு விரோதம் இருந்தாலும் நேற்றுவரை நம்மைக்கண்டால் பல்லைக்கெஞ்சிக் கொண்டிருந்த ஒரு மனிதன் இன்று இப்படிப்பேசுவதென்றால்....? நானும் கொஞ்சம் கடினமான குரலிலேயே கூறினேன்." பிள்ளைவாள் நீங்கள் உங்கள் மகனைக்கஷ்டப்பட்டு வளர்த்ததைப் பற்றியோ படிக்க வைத்ததைப் பற்றியோ நான் குறை கூறவில்லை. நீங்கள் உங்கள் மகனை எதிர் காலத்தில் எவ்வளவு பெரிய மனிதன் வேண்டுமானாலும் ஆக்கலாம். அதையும் யாரும் தடுக்கப் போவதில்லை...." என்று சொல்லிக் கொண்டு வந்தேன். மனிதன் என்னைப்பேசவிடவில்லை. முன்னைவிட உரத்த குரலில்,யாரும் என்னைத் தடுக்க முடியாது. அது எனக்குத் தெரியும்?

"இன்றைக்கு அவனுக்குப்" பெரிய லட்சாதிபதி வீட்டிலே சம்பந்தம் வந்திருக்கிறது. அவன் செய்து

கொள்ள மாட்டேன் என்கிருனே...நான் என்ன செய்யட்டும்? கல்யாணம் செய்து கொண்டால் உங்கள் பெண்ணைத்தான் செய்து கொள்வானுமே........ஏன் ஐயா இது நடக்குமா....? இது நல்லதா....நீங்களே யோசனை செய்து பாருங்கள். நாங்கள் என்ன ஜாதி. நீங்கள் என்ன ஜாதி....? அப்படி ஏதாவது செய்து விட்டால் ஊரார் என்ன சொல்வார்கள்....? ஏன் ஐயா உங்கள் நிலமையைத் தான் யோசனைசெய்து பாருமே ஒரு பெண் இப்படிப் பைத்தியக்காரத்தனமாக நடந்து விட்டால் இன்னொரு பெண்ணை எவன் ஐயா கட்டுவான்....யோசனை செய்து பாருங்களேன்....” என்று கூச்சல் போட்டார். எனக்கு ஆத்திரமாக வந்தது. ஆனால், நாம் அவசரப்பட்டு நம் குழந்தைகளின் வாழ்க்கையைக் கெடுத்துவிடக் கூடாதே என்று நினைத்து என்னை நானே அடக்கிக் கொண்டேன். இந்த மனிதனிடம் என்ன சொல்வதாலும் பயன்படாது என்ற உணர்ச்சி தலை தூக்காமல் இல்லை. ஆனல், என் மகள் என் காலைப்பிடித்துக்கொண்டு கண்ணீர்விட்டு அழுகதோற்றம் என்மனக்கண்முன்வந்தது அவளுக்காக....அவளுக்காக ... முடிந்த வரையிலும் .... மனப்பூர்வமாக முயற்சிசெய்து பார்த்து விடுவது என்று நினைத்து மௌனமாக இருந்தேன். நான் மௌனமாக இருப்பதைக்கண்டு அவர் மீண்டும். “ ஏன் ஐயா பேசாமல் இருக்கிறீர் ?” என்ருர்.

“காரியம் இன்னும் மிஞ்சி விடவில்லை பிள்ளைவாள். அதற்குள் ஏன் ஆத்திரப்படவேண்டும்...நாம் ஆத்திரப்படுவதால் மாத்திரம் எல்லாம் நம் இஷ்டம் போல் நடந்து விடுமா.... வெற்றிலை பாக்குப் போடுங்

கள்...." என்று சொல்லிவிட்டுத் தட்டில் இருந்த வெற்றிலையை எடுத்து மடிக்க ஆரம்பித்தேன். "என் இஷ்டப்படிதான் நடக்கவேண்டும்," என்று மேஜை மேல் ஓங்கிக் குத்தியவர் நான் நிதானமாக இருப் பதைப்பார்த்துச் சிறிது நேரம் இப்படியும் அப்படியு மாக நடந்துவிட்டு மெதுவாகவந்து 'சேரில்' அமர்ந் தார்.

சிறிது நேரம் நாங்கள் இருவருமே மௌனமாக இருந்தோம். பிள்ளை கொஞ்சம் சாந்தி அடைந்திருந் தார். இப்பொழுது எனக்குப் பேசுவதற்கான சமயம் என்று தெரிந்து நிதானமாகப் பேச ஆரம்பித்தேன்." ரகுவும் கமலாவும் ஒருவரை ஒருவர் காதலிக்கும் விஷயம்........

" காதலாவது கத்தரிக்காயாவது ? சிறுபிள்ளைத் தனமல்லவா அது ?

" ஆமாம். நானும் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால், அந்த விஷயம் எனக்கு நேற்றுத்தான் தெரிய வந்தது.

" எனக்குப் பத்து நாளைக்கு முன்னாலே தெரியும்...."

" உடனே நீங்கள் எனக்குத் தெரிவித்திருக்க லாம். ஆனால், செய்யவில்லை. சரி கிடக்கட்டும். எனக்கு நேற்றுத்தான் தெரியவந்தது "

" நீங்கள் என்ன செய்தீர் ?"

" நான் செய்த முதல் காரியம், இனிமேல் எனக் குத் தெரியாமல் அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் சந்திக்கவோ, கடிதத்தின் மூலம் அல்லது வேறு வித

மாகத் தொடர்பு வைத்துக்கொள்ளவோ கூடாது என்று தடுத்தது தான்...."

"சரியான வேலை....என்ன இருந்தாலும் நீங்கள் பெரிய மனிதர். நீங்கள் நியாயப்படிதான் நடப்பீர்கள்"

"ஆனல்........நான் ரகுவிடமும் கமலாவிடமும் நேரில் பேசியதிலிருந்தும்...நிதானமாக யோசித்துப் பார்த்ததிலிருந்தும் என்னல் ஒரு முடிவுக்குத்தான் வர முடிந்தது"

"என்ன அது ?"

"இனிமேல் அவர்களைப் பிரித்து வைப்பது கஷ்டம். அதனல் அவர்கள் இருவரின் வாழ்க்கையுமே கெட்டுப்போய் விடும்"....

"இல்லை இல்லை அப்படி எல்லாம் ஒன்றும் நடக்காது. அதெல்லாம் முட்டாள் தனம்"

"பிள்ளைவாள்...உங்களுக்கும் ஒரே மகன். என்னுடைய இரண்டு பெண்களையும் ஒரு தந்தைக்கு மக்களிடம் எவ்வளவு அன்பு இருக்குமோ அவ்வளவு அன்புடனும் தான் நேசிக்கிறேன். யோசனை செய்து பாருங்கள். அவர்களுடைய எதிர்காலம் இன்பமயமானதாய் இருக்கவேண்டும், என்பதைத் தவிர நமக்கு வேறு என்னதான் ஆசை இருக்க முடியும் நாமே நட்டு வளர்த்த பயிர் நம் கண் முன்னல். சிறிது வாட்டம் கொடுத்தாலே நம் மனம் என்ன பாடு படுகிறது ? அப்படியிருக்க நம் குழந்தைகள் உள்ளம் உடைந்து வாடுவதையா நாம் பார்த்துச் சகித்துக் கொள்ளப்போகிறோம்....?

"என்ன ஐயா.... உன் பெண்ணுக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டுவந்திருக்கிறாயா...."

"என் பெண்ணுக்காக மாத்திரம் அல்ல. உங்கள் மகனுக்காகவும் தான் பேசுகிறேன்..."

பிள்ளையின் ஆத்திரம் எல்லை கடந்து போயிருக்க வேண்டும். 'என் மகனுக்காகப் பேச நீ யார் ஐயா....' உன் வேலையைப்பார்த்துக் கொண்டுபோ........என் மகனுக்காகப் பேசுகிறார் மகனுக்காக....

அவர் குதித்தார். என் உடலில் தீப்பற்றிக்கொண்டதுபோல் தகித்தது. பிள்ளைக்குச் சரியான பதில் கொடுக்கவேண்டும் என்று நினைத்தேன். நா எழவில்லை. தாங்க முடியாத அவமானத்தோடும் துயரத்தோடும் வேறு வார்த்தை பேசாமல் எழுந்து வந்தேன். நான் செய்யக்கூடிய காரியம் அது ஒன்றுகத்தான் இருந்தது.

நிலை குலைந்துபோய் வீட்டில் வந்து உட்கார்ந்தேன். அவமானத்தால் என் உடலே குறுகிப்போய் விட்டதுபோல் தோன்றியது. விமலா என் எதிரில் வந்தாள். கமலாவும் என்னைப்பார்த்துக் கொண்டே சென்றுள். அவர்களுக்கு என்னை நெருங்கத் துணிவு வரவில்லை. எந்தக் காலத்திலும் என் மக்களிடம் எள்ளளவும் குன்றுது என் உள்ளத்திலே நிறைந்திருந்த அன்பு — அதுவும் கூட அப்பொழுது கசந்து போயிருந்தது. நான் என்றுமே அவர்களை வெறுப்புடன் பார்த்திருக்க மாட்டேன். ஆனுல்....

ரகு என் எதிரிலே வந்து நின்றான். அவன் கையிலே பெட்டி இருந்தது. ஆத்திரத்தில் அவன்

உடல் நடுங்கிக் கொண்டிருந்தது பார்த்தவுடன் எனக்கு அவனிடம் வெறுப்புத்தான் உண்டாயிற்று. இந்தச் சமயத்தில் இவன் ஏன் என்னிடம் வந்தான்? கொஞ்சம் பொறுத்து வந்திருக்கக் கூடாதா என்று நினைத்தேன்? நான் அவனைப்பார்த்து விட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டேன் என்று நினைக்கிறேன். அவன் இரண்டு கைகளையும் கூப்பிக்கொண்டு நாத் தழுதழுக்கக் கூறினன். "என்னல் நீங்கள் மிகவும் அவமானப்பட்டு விட்டீர்கள்....மிகவும்....சொல்ல முடியாத அளவு அவமானப்பட்டு விட்டீர்கள். உங்களுக்கு நான் மிகவும் கொடுமை செய்து விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்....என்னை மன்னித்து விடுங்கள்?

அவன் முகத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. கண்களில் கண்ணீர் துளிர்த்துக் கொண்டிருந்தது. அந்தத் தோற்றத்தை என் ஜென்ம வைரியிடம் பார்த்திருந்தால் கூட என் மனம் இளகிப் போயிருக்கும். "ரகு....நீ ஆண் மகன்....நீ கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை....'' என்றேன் நான். கரகரத்த குரலில் அவன் கூறினன்," என்னைப் பொறுத்த வரையில்...என் வாழ்க்கை அஸ்தமித்துப்போய் விட்டது. இனி நான் எதற்காக வாழவேண்டும் என்று புரியவில்லை. நான் இந்த வாழ்க்கையைப் பெறக் காரணராக இருந்த என் தந்தையே அதை முடிவுக்குக் கொண்டு வரக்காரணராகி விட்டார். நான் போகிறேன். ஏதாவது காலத்தில் நீங்கள் என்னைப் பற்றிச் சிந்திக்க வேண்டி வந்தால் ....துரதிர்ஷ்ட சாலியாகிய என்னைப்பற்றி........அனுதாபத்துடன்........அன்புடன் சிந்திக்கவேண்டும் என்றுதான் நான் கேட்டுக் கொள்கிறேன்...

பக்கத்து அறையிலேயிருந்து விம்முகின்ற ஒலிகள் என் காதிலே விழுந்தன........கமலா—என் மனம் இளகிப்போய் விட்டது. ஆனால், என்ன பேசுவது என்று தெரியாமல் விழித்துக்கொண் டிருந்தேன்—"ரகு...சும்மா மனசை விட்டு விடாதே அப்பா.... நாங்கள் எல்லாம் இவ்வளவு காலம் ஆகி உயிருடன் இருக்கிறபொழுது உன்னை இவ்வளவு சீக்கிரத்திலேயே உயிரைவிட்டுவிட விட்டு விடுவோமா? என்ற பேச்சுக் கேட்டு நான் திரும்பினேன். ரகுவும் ஆச்சரியத்துடன் திரும்பிப்பார்த்தான். பாலு எப்பொழுது உள்ளே வந்தான் என்பதை நாங்கள் இருவருமே கவனிக்கவில்லை. ஸில்க் ஜிப்பாவும் ஜரிகைக்கரை வேஷ்டியும் அங்க வஸ்திரமும் குங்குமப் பொட்டுமாக அவனுடைய வழக்கமான உடைகளில் கை நிறைய வெற்றிலையை வைத்துக்கொண்டு, சாவதனமாக ஒவ்வொன்றாகச் சுண்ணும்பைத் தடவிப்போட்டுக் கொண்டிருந்தான்.

* * *

## 4. பாலு !

உலகத்திலே என்னுடைய வேலை ரொம்பக் கஷ்டமானது ஏன் என்றால் நான் எப்பொழுதுமே உலகத்தைப் பற்றியே சிந்திக்கிறேன். என்னைப் பற்றி மாத்திரமே சிந்திப்பது என்பது என் வழக்கமல்ல. என் வாழ்க்கையிலேயே நானும் உலகமும் இரண்டறக் கலந்து போயிருக்கிறோம். பார்க்கிறவர்கள் என்ன நினைக்கிறார்கள், "இந்த பாலு இருக்கிறானே....... அசாத்திய ருஷிப் பேர்வழி.......நாடோடி.....நாரதன்.... நல்ல விஷய ஞானம் உள்ளவன் என்று. நினைக்கட்டும்

நினைக்கட்டும். அவர்கள் அப்படி நினைத்துக் கொண்டிருக்கிற வரை எனக்கு லாபம்தான், உலகத்தின் கண்களை அந்த வழியில் திருப்பி விடவேண்டும் என்பது தான் என் ஆசையும்-அப்பொழுதுதான் நம்ம காரியம் நடக்கும்.

என்னை மற்றவர்கள் நாரதன் என்கிறார்கள். என் காரியங்களும் அப்படித்தான் நடக்கின்றன. ஆனால் அப்படியிருப்பது எவ்வளவு கஷ்டம் என்பது இந்த முட்டாள்களுக்கு கொஞ்சமாவது புரிகிறதா?

பாருங்கள் ஒரு நாரதன் வேலை—மாமா உத்தியோகத்தை இப்பொழுது செய்து முடித்திருக்கிறேன். முதலியார் பெண் கமலாவுக்கும் பிள்ளைவாள் பையன் ரகுநாதனுக்கும் ரெஜிஸ்டர் ஆபீசிலே கல்யாணம். நான் சாட்சியாக அவர்கள் திருமண வைபவம் இனிது நடந்தேறி முடிந்தது. ஆனால் அதே சமயத்தில் பிள்ளைவாளுக்கும் நான் நல்லவனாக இருக்கிறேன், யாராலாவது இந்தக் காரியம் முடியுமா........? நீங்களே சொல்லுங்கள்.

கொஞ்ச நாளாகவே எனக்கு இந்த விஷயம் தெரியும். ராமகிருஷ்ண பிள்ளைதான் ஒரு மாத காலமாக காய்ந்த எண்ணெயில் கடுகைப் போட்டாற்போல் பொரிந்து கொண்டிருக்கிறாரே? ஊரெல்லாம் தெரிந்திருக்கும் விஷயம் எனக்கு மட்டும் தெரியாமலா இருக்கும்? அப்படி இருக்க முடியாதே? முதலில் எனக்குத் தெரிந்துதானே ஆகவேண்டும்? ராமகிருஷ்ணபிள்ளை புத்தியில்லாத மனிதன் ஆரம்பத்திலேயே என்னிடம் சொல்லியிருந்தால் விஷயம் இவ்வளவுதூரம் போய்விட விட்டிருப்பேனா? கடைசிநிமிஷத்தில் பையன் வீட்டை

விட்டுப் போய்விட்டபிறகு........' பாலு நான் என்ன பண்ணட்டும்? என்று கதறுகிறார். ஒன்று இப்படி அல்லது அப்படி ஆகட்டும் என்றுநினைத்துத் துணிந்து முதலியார் வீட்டுக்குப் போய் வைத்தேன். நமக்குத் தான் எங்கும் பயம் கிடையாதே?—கொஞ்ச காலமாக! இந்தப் பக்கத்தில் நம்மை நன்ருகத் தெரிந்தவர் யாரும் இல்லை. இல்லாதவரை நல்லதுதான்! அங்கே என்னடா என்ருல் அவ்வளவு படித்துப் பட்டம் பெற்று பி. ஏ. பாஸ் செய்த பையன் முதலியார் காலடியில் விழுந்து கிடக்கிருன்.

ஒன்று சொல்கிறேன் கேளுங்கள். இந்தப் பெண்கள் விஷயம் இருக்கிறது பாருங்கள். அது எங்கேயுமே இப்படித்தான். எவ்வளவு பெரிய மனிதனையும் எவ்வளவு சின்ன........ஏன் சமயங்களில் ஒரு காசுக்கும் உதவாதவனிடம் கூட மண்டிபோட வைத்து விடும். உலகத்தில் அப்படித்தான் இருக்கிறது. இந்த உலகம் இருக்கிறதே இதுவும் என்னைப் போலத்தான். விசித்திரமானது. விபரீதமானது. கபடு சூது நிறைந்தது—! இதில் அப்பாவிகளுக்குக் காலம் இல்லை! எனக்கு நன்ருகத் தெரியும். என் அளவு உலகத்தை அறிந்து கொண்டவர்கள் கிடையாது தவிர எந்தச் சமயத்திலும் நம்ம புத்தி இருக்கிறதே........ரொம்ப ரொம்பக் கூர்மையாகவே இருக்கும். இல்லாவிட்டால் சட்டென்று பிள்ளைவாளுக்காகப் பேசப் போனவன் ரகுவுக்குப் பரிந்து பேசி முதலியாரை ரிஜிஸ்டர் மணத்திற்குச் சம்மதிக்கிற அளவுக்குக் கொண்டு வந்திருப்பேனே? நான் மட்டும் போன காரியத்தை மனதில் வைத்துக் கொண்டு முதலியார்வாள் நீங்கள் இப்படிச் செய்யக்

கூடாது என்று சொல்லி இருந்தேனானால் இந்தக் கல்யாணம் நடந்திருக்குமா? ஒருக்காலும் நடந்திருக்காது.

சரி அங்கே அப்படி முடிந்தது. இங்கே இனிப் பிள்ளைவாளைச் சமாதானப் படுத்த வேண்டுமே........? அந்தக் காரியத்தையும் வெற்றிகரமாகச் செய்து முடித்து விட்டேன்! சும்மாவா உலகம் எனக்கு நாரதன் என்ற பெயர் கொடுத்திருக்கிறது. பாருங்கள். கோராகப் பிள்ளைவாளிடம் வந்தேன் வந்ததும் வராததுமாக........"பிள்ளைவாள் நம்ம காரியம் ஸக்ஸெஸ்........ நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள்", என்றேன் பிள்ளை அப்படியே அசந்து போய் விட்டார். ரகுவே நேரில் வந்து 'நான் அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை', என்று சொல்லியிருந்தால் கூட அவருக்கு அவ்வளவு திருப்தி ஏற்பட்டிருக்காது. "பாலு........நீங்கள் எடுத்த காரியம் எதுவுமே தோல்வி அடையாது. தெரியாமலா உங்களிடம் வந்தேன். காரியத்தை எப்படி முடித்தீர்........? என்று ஆவலுடன் கேட்டார். உடனே போட்டேனே ஒரு போடு........?' உம்ம பையனுக்கும் அந்தப் பெண்ணுக்கும் கல்யாணத்தை முடித்து வைத்து விட்டேன்" என்று. பிள்ளை அப்படியே மூர்ச்சையாகியிருப்பார். "உம்ம நல்லதுக்காகத்தான். மாணிக்க முதலியாரை அடியோடு ஒழித்து. இந்தப் பக்கத்தில் நீங்கள் தான் உண்மையான பெரிய மனிதர் என்பதை நிலைநாட்டத் தான் என்றேன். பிள்ளை விழித்தார். "ஏன் ஐயா பயப்படுகிறீர்? உங்கள் பையன் என்ன? ஆண்பிள்ளை தானே ? அவரைப் போலே நீங்களும் என்ன பெண்

ணையா பெற்று வைத்திருக்கிறீர்கள்....பயப்பட....? இன்றைக்கு மாணிக்க முதலி ஜாதி விட்டு ஜாதி கல் யாணம் செய்து கொடுத்து விட்டான். நாளைக்கு ஊர் முழுவதும் அவனைக் காரித்துப்பாதா ?....என்றேன்.

"அதனால் எனக்கு என் மகன் கிடைப்பானா ஐயா....!" என்று அழுது வடிகிறார் பிள்ளை. உடனே கொடுத்தேன் அவருக்கு ஒரு டோஸ் அமிர்தாரிஷ்டம் அதுதான் நீர் பயப்படாதீர் ஐயா....உங்கள் மகனை உங்களிடம் கொண்டு வந்து சேர்ப்பது என் பொறுப்பு மாணிக்க முதலியும் அவன் மகளும் தொலைந்தார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் பையன் இன்னும் நூறு கல்யாணம் செய்து கொள்ளலாம். ஒருத்தனைக் கட்டி விட்ட பிறகு அந்தப் பெண்ணை இனி யார் ஐயா ஏறெடுத்துப் பார்ப்பார்கள் என்றேன் பிள்ளைக்குக் கொஞ்சம் உயிர் வந்து விட்டது. என் னுடைய திட்டத்தை ஒன்றன் பின் ஒன்றாக நான் பிள்ளையிடம் எடுத்து வைத்தேன். நாங்கள் இரண்டு பேரும் ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தோம். பிள்ளைவாளுக்கு உள்ளம் குளிர்ந்துவிட்டது. சின் னப்பிள்ளை போல் கல கலவென்று சிரித்துக்கொண்டு போனார். ஆமாம்....பானு....மிஸ்டர் பானு....எப்பொழு தும் உலகத்தை மறந்துவிடாதே....ஆமாம். நீ உலகத் தின் மேல் கண்ணாக இருக்கிறவரை உலகம் உன்னை அசைத்துவிட முடியாது. இல்லையோ அது உன்னை விழுங்கி ஏப்பமிட்டு விடும். அது அவ்வளவு பொல் லாதது ஐயா....நான் சும்மாவா சொல்கிறேன்.

* * *

## 5. கமலா !

உலகம் இவ்வளவு பொல்லாததாக இருக்கும் என்று நான் நினைக்கவே இல்லை. தனக்கு ஒரு தீங்கும் செய்யாதவர்களை அது ஏன் இவ்வளவு துன்புறுத்த வேண்டும்? மனிதர்கள் ஏன் இவ்வளவு விசித்திரமானவர்களாக இருக்கிறார்கள்? பார்க்கப்போனால் அப்பா எல்லோருக்கும் நல்லவராக இருந்திருக்கிறாரே தவிர அவர் யாருக்குமே ஒரு தீங்கும் செய்ததில்லை. தமக்குத் தீமை செய்தவர்களுக்குக் கூட நன்மை செய்யும் இதயம் படைத்தவர் அப்பா. அப்படியிருக்க....

இந்தச் சில நாட்களாக அப்பா படும் மன வேதனை....! அவருக்கு என்னால்தானே இத்தனை அவமானமும் என்று நினைத்தால் என் இதயம் வெடித்து விடும்போல் இருக்கிறது. நான் பிறந்த அன்று முதல் இன்றுவரை அவ்வளவு அன்போடும் ஆசையோடும், என் மனம் விரும்பியதெல்லாம் தந்து வளர்த்து என்னைப் பெண்ணாக்கிய அவருக்கு நான் இப்படிப்பட்ட கைமாறு செய்யவேண்டும்? அவருக்கு இவ்வளவு துன்பத்திற்குக் காரணமாவேனென்று தெரிந்திருந்தால்.........அதைவிட நான் இறந்து போயிருக்கக் கூடாதா....?

அவரைப் பார்த்தவர்கள் பரிகசிக்கின்றனர். அவர் யார் யாருக்கு, பொன்னாலும் பொருளாலும் இன்னும் எல்லாவிதத்திலும் எல்லா உதவிகளும் செய்தாரோ....அவர்களே இன்று அவரை அலட்சியமாக அவமானகரமாகப் பேசுகின்றனர்.

ஊர்ப் பெரிய மனிதர்கள் கூட்டமாமே....அந்தக் கூட்டத்தில் அவர்கள் பத்துப்பேருக்கு முன்னால் அப் பாவைக் கேட்ட கேள்விகளும் பேசிய பேச்சுக்களும்.... அப்பப்பா...அப்பா எப்படித்தான் சகித்துக் கொண் டாரோ எனக்குத் தெரியவில்லை. அன்று முழுவதும் நான் அழுது கொண்டே கிடந்தேன். ஒருவர் கேட் டாராம், "ஏன் ஐயா ஊர்ப்பையன்களை எல்லாம் மயக்கி வசப்படுத்திக் கொள்ளத்தான் உன் பெண் களை ஆடவும் பாடவும் படிக்க வைத்தாயோ....? உன்னைப் போன்றவர்களை ஊருக்குள் வைத்திருந் தால் ஊர் என்ன ஆகிறதையா....?" என்று. இன் னெரு புண்ணியவான் "இவனை நடுத் தெருவில் விட் டுக் கல்லால் அடித்துக் கொல்லவேண்டும்" என்று யோசனை கூறினனும். இந்த உலகத்தில் நல்ல மனி தர்களுக்குக் காலமில்லை போல் இருக்கிறது. ஏன்? அவ்வளவு தூரம் போவானேன்? அப்பாவிடம் அவ் வளவு ஆட்டம் போட்டவர்கள் வேலைக்காரன் முனிய னிடம் ஏன் வாலாட்ட முடியவில்லை. அவனும்தான் கலப்பு மணம் செய்து கொண்டான். அவன் தான் அந்தப் 'பெரிய மனிதர்களுக்கு' சுடச் சுடப் பதில் கொடுத்தானமே....? அப்பா ஒரு ஊமைப் பிராணி தன்னை அடித்தவர்களைக் கூடத் திருப்பி அடிக்கத் தெரியாதவர்.

முனியன் கதை கதையாக வந்து சொல்கிறன். இங்கே வண்ணன் வெளுப்பதில்லை. நாவிதன் சிரைக்க வருவதில்லை. வீட்டிலே வேலை செய்து கொண்டிருந்த வேலைக்காரி நின்று கொண்டாள். ஆனல் முனிய னிடம் அதே ஆட்கள் கூழைக் கும்பிடு போட்டுக்

கொண்டு வேலை செய்கிறார்களாம். வண்ணான் முத லில் துணி எடுத்துக் கொண்டு போகமாட்டேன் என் றானும். டேய்....மரியாதையா எடுத்துட்டுப்போயிடு இல் லாட்டா...உன்னையும் உன் வீட்டையும் இந்த ஊர்க் காரனுங்க துணி அத்தனையையும் சேர்த்து வைத்துக் கொளுத்திப் போடுவேன் ; என்று மிரட்டினானும். “அவன் பயந்து நடுங்கிக் கொண்டு துணி எடுத்துப் போகிறானும். சொல்லுங்கள் எஜமான் உங்கள் வீட் டிலும் எடுத்துக் கொண்டு போகச் சொல்கிறேன் என் கிறான். அப்பாதான் வேண்டாம் என்று விட்டார். நம்முடைய வேலைகளை நாமே செய்து கொள்வதால் நமக்கு ஒரு அவமானமும் வந்து விடாது என்கிறார் அப்பா....

எனக்கு வீட்டு வேலை செய்வது கஷ்டமாகத்தான் இருக்கிறது. தண்ணீர் இழுக்கவும் துவைக்கவும் என் னால் முடியவே இல்லை. அவருக்கும் ரொம்பவும் வருத் தம், “கமலா....என்னால் உனக்கும் அல்லவா துன்பம் வந்து விட்டது....” என்று கூறி வருந்துகிறார், நாம் வருத்தப்படுவதனால் எதையாவது மாற்றிவிட முடியு மா....? ஏன்தான் இப்படிப்பட்ட கல்யாணம் செய்து கொண்டோம் என்று நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் அவர் முகத்தைப் பார்த்தால்...?

நாங்கள் வேறு வேறு ஜாதியைச் சேர்ந்தவர்கள் தான்....ஆனால் மனிதர்கள்தானே ? இன்னொரு ஜாதி யைச் சேர்ந்தவர் என்பதால் அவர் மனிதத் தன்மை யில் ஏதாவது வேற்றுமை வந்து விடப்போகிறதா....? எல்லோரும் ஒரு குலம் எல்லோரும் ஒரு இனம் என்ற இந்த மாபெரும் கருத்துப் பரவி வருகிற இந்த இரு

பதாம் நூற்றூண்டிலுமா மனிதர்கள் இவ்வளவு பிற் போக்கில் ஆழ்ந்து கிடக்கிருர்கள்? நான் யோசித்துப் பார்க்கிறேன். நாம் மனதால்கூடத் தீமை செய்ய நினைக்காமல் இருக்கும் பொழுது இந்த மனிதர்கள் ஏன் தான் நம்மைப் பகைக்க வேண்டும்....

இந்த மனிதர்கள் இந்த சமுதாயத்தின் உறுப் பினர்கள்தான். இந்த சமுதாயம் ஏதோ காலத்தில் வகுக்கப்பட்ட, ஆனல் இந்தக் காலத்திற்குப் பொருந் தாத சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு இயங்குகிறது. இந்த சட்ட திட்டங்களை ஆக்குவதும் அழிப்பதும் தன் கையில்தான் இருக்கிறது. இவை இருப்பதும் இல்லா மல் இருப்பதும் தன் தேவைகளை, தன் நலன்களைப் பொறுத்துத்தான் இருக்கிறது என்பவற்றை எல்லாம் மறந்து விட்டு, தலையைக் குனிந்து கொண்டு, எதையும் பாராமல் ஒன்றின் வழியிலேயே இன்னென்று செல் லும் செம்மறியாட்டுக் கூட்டம்போல் இன்னும் அந்தப் பழைய பாதையிலேயே போக விரும்புகிறது. ஆனல் சமுதாயத்தினல் அது முடியாது. அது விழிப்படைந் தே ஆகவேண்டும். தன் போக்குகளையும் எண்ணங் களையும் மாற்றிக்கொண்டே ஆகவேண்டும். அந்தக் காலம் விரைவில் வரும். வந்தே தான் தீரும் என்கிருர் அத்தான். அந்தக் காலம் வருவது என்று? அதுவரை நாங்கள் இப்படிப் படாத பாடு பட்டுக்கொண்டிருக்க வேண்டியதுதானு?

நாங்கள் எவ்வளவு ஆசையோடு ஒருவரை ஒருவர் நேசித்தோம்? நாங்கள் இருவரும் ஒன்ருகும் நாள் என்று வருமோ....என்று எத்தனை எத்தனை ஆவ லுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம்? ஐயோ

ஒரு கணம் தனிமையில் சந்திப்பதாக எத்தனை பாடு பட்டோம்? இன்று.....அந்த இணையற்ற காதல் இன்பம் கை நிறையக் கிடைத்திருந்தும் கூட.....ஒரு கணம் வேதனை இல்லாமல் முழு இன்பத்தில் மனம் செலுத்த முடிந்ததா? அவர் மனவேதனையோடு என்னை நோக்கி வருகிறார். நானும் துன்பத்தோடு அலுத்துப் போய் அவரை நோக்கிச் செல்கிறேன். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறோம். எங்கள் துன்பத்தை நாங்கள் பகிர்ந்து கொள்கிறோம் என்பதைத் தவிர வேறு ஒரு மகிழ்ச்சியும் எங்களுக்குக் கிடைக்கவில்லை....

"கமலூ....எனக்குச் சீக்கிரம் வேலை கிடைத்து விடும். நாம் பட்டணத்திற்குப் போய்விடலாம். அங்கே இந்த சாதி சழக்குகள் ஒன்றும் கிடையாது. நாம் இன்பலோகத்தில் வாழலாம்.'' என்று அவர் கூறுகிறார் ஒவ்வொரு நாளும் தபால்காரனை எதிர் பார்த்துத் தவம் கிடக்கிறார். தனக்கு வரும் கடிதங்களை எங்கே பிறர் மறைத்துவிடுகிறார்களோ என்று கூட அவருக்குப் பயம்...? நாங்கள் எங்காவது போய்விடலாம். ஆனால் அப்பா........

* * *

## 6. மாணிக்க முதலியார்

பிறரைத் துன்புறுத்திப் பார்த்துத் தாம் இன்பம் அடைகிறவர்களும் இருக்கிறார்களே. அவர்கள் இதயம் என்ன வஸ்துவால் தான் செய்யப்பட்டிருக்குமோ? எனக்குப் புரியவில்லை! வாழ்க்கை எவ்வளவு துன்ப

நிறைந்ததாக இருக்கிறது. உலகத்தில் துன்பத்தின் சுவை அறியாதவன் யாராவது இருக்கிறனு...? தனக்குத் துன்பம் வந்துறும் போது துடிதுடிக்கும் மனிதன் பிறரும் துன்பத்தில் அப்படித்தானே துடிப்பார்கள் என்பதை நினைத்துப் பார்க்கவேண்டாமா? யோசித்துப் பார்க்கப்போனல் ஒவ்வொருவரும் தன்னுல் முடிந்த வரை பிறருடைய துன்பத்தைக் குறைக்க முயல்வதுதானே மனிதத்தன்மை. அந்தத்தூய மனப்பான்மை மாத்திரம் மனிதர்க்கு வரமுடியுமானல்....? உலகம் எவ்வளவு இன்பம் நிறைந்ததாக இருக்கும்....?

மகான்கள் என்று சொல்லப்படுகிற ஒவ்வொருவரும் மனிதரை இந்த லட்சியத்தை நோக்கி இழுத்து வர முயற்சி செய்திருக்கிறர்கள். அறிஞர்கள் ஒவ்வொருவரும் மனிதர்க்கு இந்தச்சிறந்த உண்மையையே எடுத்துக் கூறியிருக்கிறர்கள். ஆனல்.... இவ்வளவு காலமாகியும் மனிதனுல் அந்த நிலைமைக்கு வந்து சேர முடியவில்லை. ஆமாம் சமுதாய அமைப்பிலேயே எதோ தவறு இருக்கிறது. மனித இனத்தின் முன்னேற்றத்தை தடுத்து நிறுத்தும் நச்சரவுகள் மனித இனத்திற்குள்ளேயே எங்கோ மறைந்து கிடக்கின்றன.

இந்தக் கொஞ்ச நாட்களாக இப்படி நேரம் போவது தெரியாமல் சிந்தித்துக்கொண்டே இருப்பது என் தொழிலாகி விட்டது, சிந்திக்கிறேன். சிந்தித்துக்கொண்டே இருக்கிறேன்....மூளைகளைப்படைகிற வகையிலும்! கவலையும் துன்பமும் மனிதனை வந்து சூழ்ந்து கொள்கிறபொழுதுதான் மனிதன் சிந்தனவாதியாகிறன் போலும்.

ஆமாம்...மனித இனத்தின் துயரங்களையும் குறை பாடுகளையும் பார்த்து மனம் புழுங்கி ஓயாமல் சிந்தித் துச் சிந்தித்தான் கிறிஸ்துவும், புத்தரும், காந்தியும் போன்ற ஞானிகள் எல்லோரும் உன்னதமான தத்து வங்களைக் கண்டு பிடித்தார்கள். வேதனைதான் எல் லாத் தத்துவங்களுக்குமே தாய்மைப் பாத்திரத்தைத் தாங்கியிருக்கிறது. ஒரு குழந்தையின் மலர்ந்த மதி வதனத்தைக் காணும் முன் தாயின் முகம் வேதனை யால் சுருங்கி மெலிகிற தல்லவா....? உலகத்தில் காணும் எல்லா உன்னதப் பொருள்களுமே வேதனை வாயிலாகப் பிறந்தவைதான். இப்படி எல்லாம் நினைக்கும்பொழுது துன்பம் வாழ்க....துயரம் வாழ்க என்று சொல்லத்தோன்றுகிறது. ஆனுல்...

நாம் தத்துவங்களை உற்பத்திசெய்து கொண்டே இருக்க இருக்கத்தான் நமது வாழ்வும் வளமும் சுருங்கி வறுமைப்படுகுழி நோக்கி முன்னேறிக் கொண்டிருக் கிறோம். வறுமையற்ற வாழ்வில் மனித இனம் தன் வசதிகளைப் பெருக்கிக் கொள்ளும் வழியில் சிந்தனை யைச் செலுத்துமானுல்....

சிந்தித்துச் சிந்தித்து மூளை குழம்புகிறது. எனக் குப் பைத்தியம் பிடிக்க வேண்டியது ஒன்றுதான் பாக்கி! ஆமாம் எனக்குப் பைத்தியம் பிடித்து வேட்டி யைக் கிழித்துக்கொண்டு திரிவேனுனல் உள்ளம் மகிழ்ந்து பார்த்துச் சிரிக்கப்பலபேர் இருக்கிறார்கள். எனக்கு ஏன் இன்னும் பைத்தியம் பிடிக்கவில்லை என்பதைப்பற்றி அவர்கள் யோசனை செய்துகொண் டிருக்கலாம். ஏன்...பைத்தியம் பிடிக்க வேண்டிய நிலையில் தானே இருக்கிறேன் நான்.

நான் பாடுபட்டுச்சேர்த்து வைத்த பணம் எல்லாம் போனதைப் பற்றிக்கூடக்கவலை இல்லை. ஆனால், என்னிடம் ஆயிரமும் இரண்டாயிரமுமாகக் கொடுத்து வைத்திருந்தார்களே....ஏழை விவசாயிகள்.... அவர்களுடைய பணம் எல்லாமும் அல்லவாபோய் விட்டது. என்னுடைய குழந்தைகளின் ஆபரணங்கள் துணிமணிகள் எல்லாம் களவு போனதைப்பற்றிக் கவலை இல்லை. ஆனால், அந்த ஏழை விதவை தன் மகளின் கல்யாணத்தின்போது கொடுத்தால்போதும் என்று கொடுத்து வைத்திருந்த நகை நட்டு முழுவதும் அல்லவாபோய் விட்டது.

என்னைக்கொள்ளை அடிக்கத் திருடர்கள் எங்கிருந்து வந்து சேர்ந்தார்கள். அதுவும் என் வீட்டில் மூலை முடுக்குகளில் வைத்திருந்த விலை உயர்ந்த பொருள்கள் எல்லாம் வைத்தவன் எடுத்ததுபோல் அப்படிப் பொறுக்கி எடுத்துக்கொண்டுபோக அவர்களுக்கு எப்படித் தெரிந்தது. உள்ளறிந்த கள்ளன் என்பார்களே....அப்படிப்பட்ட உள்ளறிந்த கள்ளன் எனக்கு எங்கிருந்து வந்து மூளைத்தான்? நான் யாருக்கு என்ன துரோகம் செய்தேன்? போலீஸ் விசாரணையின்போது "உங்களுக்கு யார்மேலாவது சந்தேகம் இருக்கிறதா சொல்லுங்கள்....சும்மா யார் பேரிலாவது சொல்லுங்கள்..." என்று திருப்பித் திருப்பிக் கேட்டார் அந்த சப் இன்ஸ்பெக்டர். பாலு மெதுவாக என் காதில் வந்து "சும்மா ராமகிருஷ்ண பிள்ளைமேல் சொல்லுங்கள்.... அவன்தான் கொலைகாரன். ஆள் வைத்துச் செய்திருப்பான், என்று சொன்னான். ஆனால், என் மனம் இசையவில்லை.

நம்மிடம் அணுவளவும் ஆதாரம் இல்லாமல் இருக்க அபாண்டமாக? ஒருவர்மேல் பழி சுமத்துவதா....?

அன்று ரகு பட்டணத்தில் இருந்து வந்திருக்கிருன், நல்லகாலம் அவனுக்குப் பட்டணத்தில் ஏதோ பாங்கில் நல்ல உத்தியோகம் கிடைத்து விட்டது. வீடும் சௌகரியமாகக் கிடைத்திருக்கிறது. கமலாவை அழைத்துக்கொண்டு போகவேண்டும் என்று வந்திருந்தான். எங்கே ரொம்ப நேரம் வரை பேசிக்கொண்டிருந்து விட்டு கவனித்துக் கதவைத் தாழ் இடாமல் படுத்துக்கொண்டார்களோ....ஆனுல், இதற்கு முன்னுல் இந்த வீட்டில் இப்படி எத்தனையோ தடவை கதவை அடைக்காமல் கூடப்படுத்துக் கொண்டதில்லையா....? என் போதாத காலம்....! அதைத் தவிரச் சொல்லிக்கொள்ள வேறு என்னதான் இருக்கிறது.

கமலா போய் விட்டாள். எது எங்கிருக்க வேண்டுமே அது அங்கிருப்பது தானே சிறப்பு....? அதன் வாழ்வால் அங்குதானே பயனும் ஏற்படுகிறது. முத்தைப் பெறுவதற்காகத் தன் உயிரையே தியாகம் செய்யும் சிப்பி அதைத் தன்னிடமே வைத்துக் கொள்ள முடிகிறதா...? அப்படி வைத்துக் கொண்டாலும் அதற்கு ஏதேனும் பயன் உண்டா...? முத்துத் தான் சிறப்பை அடையமுடியமா ....? கமலா...தன் ஆடல் பாடல்களால், அருவிச் சிரிப்பொலியால் இந்த வீட்டை நிறைத்துக் கொண்டிருந்தாள். என் உள்ளத்தையும் நிறைத்துக் கொண்டிருந்தாள். இப்பொழுது அவள் தன் வாழ்வை நிறைவுறச் செய்து கொள்வதற்காகத் தன் கணவன் வீடு சென்றிருக்கிருள். இதில் நான் வருத்தப்பட என்ன இருக்

கிறது ? நாளைக்கு விமலாவும் அப்படித்தான் ! தமக் கையைப் பிரிந்தபின் பாவம் அவளுக்குத் தான் ரொம் பக் கஷ்டமாக இருக்கிறது.

நான் என்னுடைய கஷ்டத்தைப் பற்றியே எண் ணிக் கொண் டிருக்கிறேன். என்னிடம் பணம் கொடுத்து வைத்திருந்தவர்கள்.......அவர்கள் மனம் என்ன பாடுபட்டுக் கொண்டிருக்கிறதோ....? அப்பா.... என்னால் சிந்திக்க முடியவில்லை. துயரம் இதயத்தை அழுத்துகிறது....! ஆமாம்....இன்னும் கொஞ்ச நாளில் எனக்குப் பைத்தியம் பிடிக்கவேண்டியதுதான் பாக்கி.

* * *

7 ராமகிருஷ்ண பிள்ளை:

இன்னும் கொஞ்ச நாளில் அவனுக்குப் பைத் தியமே பிடித்து விடும்...ஆமாம்....வேண்டியதுதான் அவனுக்கு....? என் மகனைக் கெடுத்து விட்டானே... பாபி....அவனுக்கு நன்றாக வேண்டும்...! உம்....அவனை இத்தோடு விட்டுவிட்டேனா....? அப்படி விட்டு விட் டால் என் பெயர் ராமகிருஷ்ண பிள்ளையாக இருக் காது...! பாலு கெட்டிக்காரன். சொன்ன காரியத் தைச் சரியாகச் செய்து முடித்துவிட்டான். இன்னும் என் வேலைதான் பாக்கியாக இருக்கிறது. அதுவும் முடிந்துவிடும்....அப்புறம்.........பிள்ளைவாள்....உங்கள் ஜென்ம வைரி மாணிக்கமுதலி பைத்தியம் பிடித்து அலைவதை உன் கண்ணால் பார்த்துச் சிரிக்கலாம். ஆமாம்.........கண்டிப்பாக. அப்புறம் ரகுவும் அவளை விட்டு விட்டு ஓடி வந்துவிடும்படி செய்வது ரொம்ப

சுலபம்....! பாலுவால் அதுவும் செய்துவிட முடியும்....! என் குடும்பத்தை நாசமாக்கிவிட நினைத்த முதலி யாரும் அவன் குடும்பமும் அடியோடு நாசமாகி விடும். அஹஹா....என்னிடமா நடக்கும்? ராமகிருருஷ்ண பிள்ளை இருக்கிருனே....அவன் கால சர்ப்பம். ஆத் திரப்பட்டுத் தன் எதிரியைக் கண்டவுடனே பாய்ந்து காரியத்தைக் கெடுத்துக் கொள்கிற அறிவிலி அல்ல அவன். வேளை அறிந்து உயிரை வாங்குகிற வஞ்சகன் ஆமாம் வஞ்சகன் தான். என்னை வஞ்சிக்க நினைப் பவர்களுக்கு....?

மாணிக்க முதலியாரே....என்னென்ன மனக் கோட்டை கட்டினுய். பிள்ளைவாளின் மகன் நன்ருகப் படித்தவன். நிறையச்சம்பாதிப்பான். தவிர பிள்ளைக்கு ஒரே மகன் ஆனதால் எப்படி ஆனுலும் அவர் சொத் தும் அவனுக்குத்தான் வந்து சேரும். நாம் குபேரன் ஆகிவிடலாம் என்றெல்லாம் நீ திட்டம் போட்டிருப் பாய்...? இப்பொழுது என்ன ஆயிற்று....? என்ன தான் ஆயிற்று என்று கேட்கிறேன்....? உம்...கெடு வான் கேடு நினைப்பான்....? நீ எனக்குக் கேடு நினைத் தாய்....நான் உனக்கு நினைத்ததில் என்ன தப்பு? மாணிக்கமுதலியார் பிறருக்குக் கேடு நினைக்கமாட் டான் என்று சொல்வார்கள். ஆனுல் அவன் எனக் குச் செய்தது என்ன என்பதை நான் எடுத்துக் காட்ட லாம் அல்லவா...?

இந்தக் காலத்தில் நல்லதும் கெட்டதும் பார்க்கக் கூடாது! மாணிக்க முதலியார் நல்லது கெட்டது பார்ப் பவனுக இருந்தால் என் மகனை என்னிடமிருந்து பிரித் துத் தன்னிடம் சேர்த்துக் கொண்டிருப்பாஞ....?

அவன் செய்ததை நாம் ஏன் செய்யக்கூடாது என்கிறேன்? பாபமாவது புண்ணியமாவது? பிள்ளைவாள் நீர் புத்திசாலி....உம்மிடம் பாபத்தின் பாச்சா பலிக்காது. உம்மை அதனுல் அசைக்க முடியாது....பணம் உள்ளவரை....உம்....தைரியமாக முன்னேறும்! உன் வழியில் செல்லு...நீயும் ஒரு தலைவன். நீயும் ஒரு பேச்சாளன். நீயும் ஒரு பெரிய மனிதன். உலகம் புகழும் கனவான்....ஊருக்குள்ளே உனக்கு நிகர் நீதான். உன் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசுவார் இருக்கக் கூடாது....உம் முன்னேறு....! பாலு உலகம் தெரிந்தவன் அவனை வழி காட்டியாக வைத்துக்கொள் ஆஹா........

இன்று என் மனதில் அளவற்ற சந்தோஷம் குடி கொண்டிருக்கிறது. இந்நேரம் மாணிக்க முதலியின் வயிறுபற்றி எரிந்து கொண்டிருக்கும். எரியட்டும்! நன்ருக எரியட்டும்! பாலு இவ்வளவு நன்ருகக் காரியத்தைச் செய்து முடிப்பான் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. வீட்டிலுள்ள நகை நட்டு, பாத்திரம் பண்டம் பணம் கிணம் எல்லாம் வைத்தவன் எடுத்தது போல் அடித்துக்கொண்டு வந்து விட்டான். அட பாலு....இத்தனை திருட்டுச் சொத்தையும் என்னப்பா செய்கிறது என்ருல் நீங்கள் கவலைப்படாதீர்கள். மதுரையில் எனக்குப் பெரிய பாங்க் ஏஜெண்ட் ஒருவரைத் தெரியும். அவர் மூலமாக ரொம்ப சுலபமாக ஒழித்துக் கட்டிவிடலாம். நீங்கள் உலகம் தெரியாதவர் பயப்படுகிறீர்....உலகம் என் பாக்கெட்டுக்குள்ளே இருக்கிறது எனக்குப் பயம் இல்லை....! என்கிருன். எனக்கென்னவோ இன்னும் கூட உள்ளூறப் பயம்தான்! எதற்கும் ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும். அத

ஞல் தான் திருட்டுச் சொத்துக்களை எல்லாம் நம்ம வீட்டுப் பக்கத்தில் வைக்கவே நான் சம்மதிக்கவில்லை.

உம். இப்படிப் பயப்பட்டால் எதிரியை வெல்ல முடியுமா ? பாலு சொல்வதைப்போல் இந்த உலகத்தில் துணிவுள்ளவ ஞலேயே பிழைக்க முடியும். கோழை நடுங்கிச் சாகவேண்டியதுதான். அவனுக்கு இந்த உலகத்திலே இடம் கிடையாது. மாணிக்கமுதலியிடம் கந்தப்ப கவுண்டன் பணம் கொடுத்து வைத்திருந்தான். அவனைப் பார்க்கவேண்டும். சூட்டோடு சூடாக அவன் வீடு வாசல் நிலபுலம் எல்லாம் பிடுங்கிக் கொண்டு தெருவில் துரத்திஞல்தான் என் மனம் நிம்மதியாகும். அப்பொழுதுதான் என் வயிறு குளிரும்!

பாலுவைச் சீக்கிரம் பட்டணத்திற்கு அனுப்பியாக வேண்டும். திருட்டுச் சொத்துக்களை இனிமேலும் இங்கே வைத்துக் கொண்டிருக்கக் கூடாது. உம் புறப்படுகிறேன். நம்ம காரியங்கள் இனித் துரிதத்தில் நடக்கவேண்டும்.

* * *

8 பாலு

உலகம் நம்மைப் பார்த்து மிரள மிரள விழிக்க ஆரம்பித்திருக்கிறது. இனி அது பாலு என்ன செய்து விடுவாஞே என்று பயந்து சாகவேண்டி வரும். உலகத்தை அவ்வளவு கஷ்டப்பட விட்டு விடக் கூடாது ! நாம் சீக்கிரத்தில் ஸ்விட்சர்லாந்துக்குப் போயாக வேண்டும். அப்புறம்....

உயர மலைகளின் மேலே.......பனிப் பாறைகள் தனிலே...உல்லாச மேல் நாட்டு லேடிகளோடே...!கை யோடு கைசேர்த்து நாம் ஸ்கிப்பிங் விளையாடலாம்...! ஆஹா....பாலுவின் கனவுகள் நனவாகும் காலம் என்று ?....ஸ்விட்ஸர்லாந்துகூட பிரயோஜனம் இல்லை நம்மைப் போன்ற ஆள்களுக்கெல்லாம் அமெரிக்கா தான் லாயக்கு....! பியூட்டிகளோடே ரொமான்ஸும் பார்ச்சூன் ஹன்டர்களோடே....முகமூடி, துப்பாக்கி... டுமீல்டுப்....அந்தப் பக்கத்திலே ஒரு ஆள் பிணம் இந் தப் பக்கத்திலே நம்கை நிறையப் பணம்....டாலர் ஐயா டாலர்.......அமெரிக்கா ஈஸ் ஆன் அட்வென்சரஸ் கண்ட்ரீ...' அங்கே போயாக வேண்டும் சீக்கிரம்....!

நம்ம சாகஸம் இருக்கிறதே யாருக்கு வரும்? நான் தான் எல்லோருக்கும் நல்லவன் பாலு! ஒன்றும் அறி யாதவன்! வெள்ளை உள்ளம் படைத்தவன். வழவழா என்று பேசித் திரிகிறவன்....சபாஷ் பாலு....நீ இப் படியே இரு....அதுதான் உனக்கு நல்லது!

பட்டணத்தில் வந்து இறங்கியவுடன் முதலாவ தாக நம் உடைகளை மாற்றிக்கொண்டேன். ஸில்க் ஜிப்பாவும் அங்கவஸ்திரமும் குங்குமப் பொட்டும், வெற்றிலை பாக்கும் பட்டிக்காட்டுச்சுச்சரி. பட்டணத் திற்கு அதெல்லாம் சரிப்பட்டு வருமா? உலகம் பாஷனில் அல்லவா அடித்துக்கொண்டு போகிறது! இங்கே ஒரு ஸூட்டும் ஹேட்டும் சிகரெட்டும் இருந் தால், நம்மைப்போன்ற விஷயம் தெரிந்த ஆள் ஊரையே விலைக்கு வாங்கி விடலாம்

வந்ததும் முதலாக என்மனம் கொஞ்சம் குஷி யாக இருக்க விரும்பியது. ப்ரதிபா பிக்சர்ஸுக்குப்

போயிருந்தேன், அங்கே என்ன....பாலு அண்ணு வந்துட்டார். பாலு அண்ணு வந்துட்டாருன்னு ஒரே தடபுடல் தான்....ஐயா காட்சி அளித்து விட்டார் என்ருல் அக்கம் பக்கத்திலுள்ள எக்ஸ்ட்ராக்களெல்லாம் நம்ப காலைப் பிடித்துக்கொண்டுதானே தொங்குகிருர்கள் ? அவ்வளவென்ன அந்த நாட்டிய சகோதரிகள் நளினு வனஜா...பிரபல நட்சத்திர நடிகை சாந்த குமாரி.......சாந்த குமாரியுடன் அவளுடைய ப்யூக் காரிலே உல்லாசமாக ஊர் சுற்றி வந்த காட்சியும், அவள் வீட்டிலே உண்ட விருந்தும் நாட்டியக் கச்சேரியும், அதன் பின் சொகுசாகக் கழித்த இரவும்...அடடா...ஒரு நாள் இருந்தால்தான் என்ன...ஸ்வர்க்கம் ஸ்வர்க்கம்தான்....?

பாலு எப்பொழுதும் காரியவாதி....! சொர்க்கத்திலேயே ஆனுலும் அந்த அளவு குறிப்பிட்ட 'டைமுக்கு'மேல் இருக்கமாட்டார். மறுநாள் பொழுது விடிந்ததுமே புறப்பட்டுவிட்டேன். நம்ம நண்பர் சந்திர சேகரைப் பார்ப்பதற்கு ஆசாமி வீட்டில் இல்லை. அவருக்கென்ன மனைவியை எமலோகத்திற்கு அனுப்பியாயிற்று....! பணத்தின் மேல் தான் புழக்கம் எல்லாம். மனிதனுக்கு எவ்வளவு சம்பாதித்தும் ஆசை தீர்வதாக இல்லை. குறைந்தது ஒரு கோடீஸ்வரனுவது அவருடைய லட்சியமாக இருக்கும் என்று நினைக்கிறேன். நம்முடைய நண்பர் என்ருல் வேறு விதமாகவா இருக்கப் போகிருர் ?....சிகரெட், குடி...ஒரு கெட்ட பழக்கமும் இல்லை. ஏனென்ருல் அவை எல்லாம் சிலவுக்கு வழி அல்லவா....?

வீட்டில் இல்லாவிட்டால் ஆள் பாங்கில் இருப்பார் என்று நினைத்து அங்கே போனேன். ஆசாமி பணத்தைப் புரட்டிக்கொண்டிருந்தார்.

ஆளுக்கு உயிர் போவதானல் கூட பணத்தை எண்ணிக்கொண்டிருக்கும் பொழுதுதான் போகும் என்று நினைத்துக்கொண்டு "ஹலோ சந்திரசேகர் குட்மார்னிங்...." என்றேன். ஆசாமி என்னைப்பார்த்ததும் திகைத்துப்போய் விட்டார். நான் காரியம் இல்லாமல் அங்கு வரமாட்டேன் என்பது அவருக்குத் தெரியும்.

இருவரும் தனியாக உட்கார்ந்து கொஞ்ச நேரம் 'பிஸினஸ்' பேசிக்கொண்டிருந்தோம். ஆள் எமகாதகன். லாபம் இல்லாமல் ஒரு காரியம் செய்யமாட்டான். நம்மிடமே 50-சதம் கமிஷன் கேட்கிறுன் என்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன். நகைகளைப் பார்த்துக் கொண்டே அக்கௌண்டென்டைக் கூப்பிடச்சொன்ஞர். உள்ளே வந்த ஆளைப்பார்த்ததும் நான் திகைத்துப்போய் விட்டேன். ஏன் வேறு யார்....? அந்த நகைகளுக்குச் சொந்தக்காரனேதான்....மிஸ்டர் ரகு.

"ஹலோ......ரகு......சௌக்கியமா...." என்று கேட்டுக்கொண்டே அவன் தோளின் மேல் கையைப் போட்டு இந்தப் பக்கமாகத் திருப்பிக்கொண்டு யோக சேமங்களைப்பேச ஆரம்பித்தேன். வேறு ஒரு ஆளாஞல் அந்தச் சமயத்தில் கைகால் நடுங்கி உளறிப் போயிருப்பான். பாலுவைத் தவிர வேறு எப்படிப் பட்ட வில்லனுயிருந்தாலும் சமாளித்துக்கொண்டிருக்க முடியாது. ஆனல், மிஸ்டர் பாலு.... புலி அல்லவா? அதே சமயத்தில் சந்திர சேகருக்கும் சந்தேகம் ஏற்படாமல் இருக்க வேண்டுமே....?

ஒரு தினுசாக சந்திரசேகர் ரகுவை அனுப்பி வைத்ததும், "இவனை எங்கே இருந்து பிடித்தீர்கள்?" என்று மெதுவாக ஒரு கேள்வியைப் போட்டுவைத்தேன்? "என்ன.........நீங்கள் பேசிக்கொண்டதைப் பார்த்தால் உயிருக்குயிர் சிநேகிதர்களைப்போல் தோன்றிற்று....?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் சேகர். "நன்ருகச் சொன்னீர்கள். சிநேகிதமாய்...? இவனிடமா...ஐயோ.... நல்ல பாம்பிடம் சிநேகம் வைத்தாலும் நய வஞ்சகனிடம் வைக்காதே என்பார்கள். கொல்லும் புலியை நண்பனுகக் கொண்டாலும் கூடிக் கழுத்தறுக்கும் கொலைபாதகர்கள் கிட்டவும் நெருங்காதே என்பார்கள். இருந்திருந்தும் நான் இவனிடமா சிநேகிதம் வைப்பேன்?

"அவ்வளவு அயோக்யனு இவன்?"

"பின் என்ன ஐயா....? நம்ம ஊரிலே....நல்ல உத்தமமான குடும்பம் ஒன்றிலிருந்து...அவர்கள் நல்லவன் என்று நம்பிப் பழக்கம் வைத்துக் கொண்ட தோஷத்திற்காக....ஒரு பெண்ணை அடித்துக்கொண்டு வந்து விட்டானய்யா....? அவமானத்தினுல் அவர்கள் அன்று முதல் வீட்டை விட்டு வெளியிலேயே இறங்குவதில்லை. பின் என்ன....? நல்லவனைப் பகைத்துக் கொண்டாலும் கெட்டவனைப் பகைத்துக் கொள்ளாதே என்ற பழமொழிக் கிணங்க....அவனைப் பகைத்துக் கொள்ளக்கூடாதே என்பதற்காகத்தான் இப்படி அந்யோன்யமாகப் பேசிக் கொள்வதெல்லாம்....என்றேன்.

சந்திரசேகர் யோசனையுடன் தாடையை நீவிக் கொண்டு "எனக்கு முன்பே தெரியாமற் போயிற்று. அதனுல் பரவா யில்லை. இன்னும் அவன் செக்யூரிடி

கட்டவில்லை......என்றார்." சரி அதை இப்பொழுதே வைத்துக் கொள்ளாதீர்கள்...சாவகாசமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அவன் என்மேல் ஏதாவது சந்தேகப் பட்டுவிடப்போகிறான்....என்றேன். பாலுக்கு இடைஞ்சலாக யாரும் எங்கும் தோன்றி விடக்கூடாது. தோன்றுவதாக இருந்தால் அவன் தோன்றும் முன்பே ஒழிந்து விடுவான். ஏனென்றால் உலகம் அவன் கைக்குள் இருக்கிறது பாருங்கள்....

* * *

## 9 மாணிக்க முதலியார்

துன்பம் ஒரு முறை காலடி எடுத்து வைத்துவிட்டால், தனக்குப் பழக்கமான வீட்டிற்கு ஓடி ஓடிவரும் குழந்தைபோல் திரும்பத்திரும்ப வந்து கொண்டே இருக்கும் போலும்....யாரை நொந்து கொள்வது? எனக்கு புரியவில்லை. விதி என்பதா...வல்லவர் செய்யும் சதி என்பதா....எதைச் சொல்வது என்று தெரியவில்லை. நம்மை மீறித் துன்பங்கள் வந்து துளைக்கிற போது....வேறு வகை தெரியாமல் விழிக்க நேரிடுகிற போது, விதியையும் ஆண்டவனையும் தான் துணைக்கழைக்க வேண்டியிருக்கிறது. எல்லாம் செய்ய வல்ல மனிதனே தன் அறியாமையால் தன் சகோதர மனிதனுக்கு உதவ மறுத்துவிட்டபோது ஆண்டவன் தானு வந்து துணை புரிந்துவிடப் போகிறார்?

ஆயிரக் கணக்கான ரூபாய்பெறுமான சொத்துக்கள் சம்பாதித்து வைத்திருந்தேன். யாரையும் வஞ்சித்துச் சம்பாதித்ததல்ல. ஒன்றுக்கு இரண்டு வட்டி

வாங்கியோ, ஓராயிரத்திற்கு இரண்டாயிரத்திற்கு எழுதி வாங்கி ஏமாற்றியோ, யாருமற்றவர் சொத்தை அபகரித்தோ சம்பாதித்ததல்ல என் சொத்துக்கள். பெரியவர்கள் வைத்துவிட்டுப் போன நிலத்திலே அல்லும் பகலும் பாடுபட்டு....என்னேடு உழைத்தவர்களுக்குச் சமபங்களித்தது போக மிகுத்ததில் வந்த சொத்துத்தான் அத்தனையும். என்னல் எத்தனையோ பேர் நல்ல நிலைமைக்கு வந்திருக்கிறார்களே தவிர யாருமே கெட்டுப் போகவில்லை. ஏன் இந்த ராமகிருஷ்ண பிள்ளைக்குக் கூட ஆயிரமும் இரண்டாயிரமுமாக எத்தனையோ இக்கட்டான நிலைமைகளில் கடன் கொடுத்து உதவியிருக்கிறேன். ஆனல்....

நான் யாரையும் வஞ்சிக்காமலிருந்தும் என்னுடைய சொத்துக்கள் வஞ்சகரால் கவரப் பட்டு விட்டதே....! அதுமட்டுமா....இத்தனை காலமும் என் கண்ணின் மணியாய்க் காத்துவந்த என்னுடைய நிலபுலன்களின்மேலும் ஜப்தி....! அதுவும் எவ்வளவு அக்ரமமாக........!

கந்தப்ப கவுண்டர் என்னிடம் இரண்டாயிரம் ரூபாய் வரை கொடுத்து வைத்திருந்தார். சில்லறை சில்லறையாகக் கொடுத்துச் சேர்த்த பணம் அது. பாவம் அவர் ஏழை....நல்லவரும்கூட....! என்னிடம் இருக்கும் பணம் இரும்புப் பெட்டியில் இருப்பதைப் போல....என்று அவரே அடிக்கடி சொல்வது வழக்கம் திருட்டுப் போய்விட்ட அன்று கூட அவர் வந்திருந்தார். என்னுடைய சொத்தெல்லாம் போய்விட்டது கொடுத்து வைத்திருந்தவர்கள் பணம் பூராவும் போய்விட்டது என்று நான் கூறியபோது அவர் ரொம்பவும் வருத்தப்பட்டார். ஆயினும் மனிதத் தன்மையோடு,

நாம் என்ன செய்யலாம். இப்படி எல்லாம் வரும் என்று நாம் எதிர் பார்த்தோமா...போகட்டும் உங்க ளால் முடிகிறபோது கொஞ்சம் கொஞ்சமாகத் திருப் பிக் கொடுங்கள். அதுவும் உங்களுக்குக் கஷ்டம் இல் லாமல் இருந்தால் சரி...." என்று கூறினர். நம் நாட்டு மக்களின் எளிமையான கருணை நிறைந்த பண்பின் பிரதிலிப்பு இது........?

ஆனல் அதே மனிதர் பத்து நாட்களுக்குள்ளாக, 'என் பணம் பூராவும் கொடுத்து விடுங்கள். இல்லா விட்டால் நான் ஊரிலேயே இருக்க முடியாது. ஜாதிக் கட்டுப்பாடு செய்யபட்டிருக்கும் போது உங்களிடம் வரவு செலவு வைத்துக்கொண்டால் என்னையும் அவர் கள் சும்மாவிட மாட்டார்கள் என்று சொல்லிக் கொண்டு வருவதென்றால்........? நான் கூடிய சீக்கிரம் இந்த அறுவடையிலேயே அவர் பணத்தைக்கொடுத்து விடுவதாகக் கெஞ்சிக்கேட்டுக்கொண்டேன். "ஏனுங்க ....முதலிலே கொஞ்சம் யோசனை பண்ணிச் செஞ்சி ருந்தா இப்படி எல்லாம் வருங்களா? ஜாதி விட்டு ஜாதி பெண்ணைக் கொடுக்கலாமா? இது தெய்வத்துக்கு அடுக்குங்களா?" என்று அடுக்கிக் கொண்டே போனர் மனிதர். "இந்தாங்க கவுண்டரே.......இந்த விஷயம் எல்லாம் உங்களுக்குப் புரியாது. அதைப் பற்றி எல்லாம் ஏன் பேசறீங்க. உங்க காரியத்தைப் பாருங்க...." என்று கொஞ்சம் கடினமாகவே கூறி விட்டேன். மனிதர் முனகிக்கொண்டே போனர். ஆனல்....என்னிடம் எவ்வளவு விரோதம் இருந்தாலும் அவராக இப்படிச் செய்திருக்க மாட்டார். அந்தக் கொடியவர்கள்............

கமலாவுக்குப் பிரசவ மாதம். என்னுடைய அன்பு மகள் தன்னுடைய அன்புக்கொழுந்தை ஈன்றெடுக்கப் போகிறாள். வாழ்க்கை.......அதில் வேறென்னதான் இருக்கிறது? அன்பு என்கின்ற செழுமையான பொருள் ஒன்றுமட்டும் இல்லாவிட்டால் அதன்பிறகு உயிர்ப் பிராணிகளுக்கும் உயிர் இல்லாதனவற்றிற்கும் ஒரு வேறுபாடும் இல்லாமல போய்விடும். மனிதர்களும் கல் மண் போன்ற உயிரில்லாப் பொருள்கள் ஆகிவிடுவார்கள்........அன்பு....! மனித வாழ்க்கையின் சத்தான பொருள் அது. அன்பு செய்யப் பிறந்த மனிதர் ஏன் தான் வெறுப்பை வளர்த்துக் கொள்கின்றனர். மனித இதயத்திலே எப்படித்தான் வஞ்சனை, சூது, பொய், கபடு, துவேஷம் முதலானவற்றை வைத்துக் கொள்ள முடிகிறது? வாழ்க்கையின் உண்மையான அர்த்தத்தைப் புரிந்து கொண்டவர்கள்! உண்மையான பயனை உணர்ந்து கொண்டவர்கள் ஒருக்காலும் அத்தகைய தீயஉணர்ச்சிகளுக்குத் தங்கள் உள்ளத்திலே இடம் கொடுக்கமுடியாது. நான் இப்படி நினைக்கிறேன். ஆனல்.......ராம கிருஷ்ணபிள்ளைக்கு எனக்குத் தீங்கு செய்வதிலே ஏன் தான் அத்தனை மகிழ்ச்சி! அப்பப்பா............

நான் இல்லாத சமயத்திலே கந்தப்பகவுண்டரைத் தூண்டிவிட்டு என் நிலபுலன்களை ஜப்திக்குக்கொண்டு வந்து விட்டனர். மகளையும் குழந்தையையும் கண் குளிரப் பார்த்துவிட்டு ஊருக்குத் திரும்பி வந்தேன். வந்ததும் வராததுமாக விளைந்து நிற்கும் என் நிலங்களைப் பார்க்கப் போனேன். கரும்பும் நெல்லும் பருத்தியும் நன்ருக விளைந்து கொழுகொழு வென்று

நிற்கின்றன. இந்த வருஷம் நல்ல அறுவடை கிடைக்கும். கடன்களை எல்லாம் கட்டி விடலாம் என்று மன மகிழ்ந்து நின்றேன். அதே சமயத்தில் அமீனவும் கணக்குப் பிள்ளை மணியக்காரரும் கவுண்டரும் பிள்ளையும் வந்து சேர்ந்தார்கள். நான் இல்லாத சமயத்திலே என் சொத்தை அபகரிக்க எல்லோரும் கூடிச் சதி செய்து விட்டார்கள்........ஐயோ....நினைக்கும் பொழுது எனக்கு உளமெலாம் பற்றி எரிகிறது. நான் என்ன செய்வேன். ஊரெல்லாம் பகை! இல்லாவிட்டால் எப்படியாவது சமாளித்துக் கொண்டிருப்பேன். இதே மாதிரிக் கடன் காரர் ஜப்திக்கு வந்துவிட்ட காலத்திலல்லவா நான் பிள்ளைக்கு உதவி செய்தேன். அதற்கு அவன் செய்யும் கைமாறு இதுதான்போனும்.

சட்டபூர்வமாக ஏதாவது செய்ய முடியுமா என்று பார்க்க வக்கீலைத் தேடிச் சென்றேன். காலம் கடந்து போய்விட்டது. இருந்தாலும் முயற்சி செய்து பார்க்கலாம் என்றூர். என் உள்ளம் இடிந்து போகிறது... எனக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை....... இனி என்ன செய்தாவது எங்காவது வேறு ஊருக்குப் போய்விட வேண்டும். அரைக்கணம் கூட இங்கே தாமதிக்கக் கூடாது என்று தோன்றுகிறது. நான் எங்கு செல்வேன்! என்ன செய்வேன்.......?

* * *

10 ரகு.

நான் எங்கு செல்கிறேன்? என்ன செய்கிறேன்? நான் உயிருடன் தான் இருக்கிறேன். ஆனல் செத்த பிணம்போல் உணர்கிறேன். கூவென்று கத்திக்

கொண்டு ஆரவாரத்துடன் ஓடிச் செல்லும் இந்த ரயில் என் பிரேதத்தைச் சுமந்து செல்கிறது. ஐயோ நான் பாதகன்....! நான் பாதகன்....!!

என்னை மீறிக் கண்களிலே கண்ணீர் கொப்புளித்துக்கொண்டு வருகிறது. மற்றவர்கள் பார்வையிலிருந்து என் முகத்தை மறைத்துத் தலையணையில் புதைத்துக் கொண்டு நான் விம்முகிறேன். என் துயரம் எல்லாம்....என் கவலையும கண்ணீரும் எல்லாம் சேர்ந்தாலும்....என் அன்பு மனைவிக்கு ஒரு கவளம் உணவளிக்குமா ? என் ஆருயிர்க் குழந்தைக்கு ஒரு சங்கு பால் ஆகுமா...? ஆகாது....ஆகாது!!

மூன்று மாதத்திற்குள் ஆயிரம் ரூபாய் ரொக்க ஜாமீன் கட்டுவதாகச் சம்மதித்து வேலையை ஒப்புக் கொண்டேன். எந்தத் துணிச்சலில் எங்கிருந்து சம்பாதித்துக் கட்டுவதாக ஏற்றுக் கொண்டேன் ? ஏன் ? அந்தச் சமயத்தில் என் மாமனரிடமிருந்து பணம் வாங்கிக் கட்டிவிடலாம் என்றுதான் நினைத்தேன். கமலாவுக்காக அவர் எதையும் செய்திருப்பார். ஆனல்........

நான் கமலாவை அழைத்துவரச் சென்றிருந்த அதே நாள், அதே இரவு...அவருடைய சொத்துக்கள் அத்தனையும் கொள்ளை யடிக்கப்பட்டன. என் உள்ளத்தில் இடி விழுந்ததுபோல் ஆயிற்று. அந்தத் துயர் சூழ்ந்த நிலையிலே கருத்தரித்திருந்த அவளை அங்கே விட்டுவிட்டு வரவும் கூடாது என்று அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். அந்தச் சமயத்தில் எனக்கு எவ்வளவு துணிவிருந்தது. பாங்க் ஏஜெண்ட் கம்மேல் பிரியமாயிருக்கிறர். அவரிடம் விஷயத்தைச்

சொல்லிப் பார்ப்போம். கண்டிப்பாக ஜாமீன் கட்டித் தான் ஆகவேண்டும் என்ருல் மூன்று மாதங்கள் இருக் கின்றனவே....அதற்குள் வேறு உத்தியோகம் பார்த் துக் கொண்டால் போகிறது. நம்முடைய படிப்புக்கும் சாமர்த்தியத்துக்கும் வேலைதாஞ கிடைக்காது என்று நினைத்தேன்.

ஏஜென்டிடம் ஒரு தடவை நான் ஜாடையாக இதைப்பற்றிச் சொன்னபோது, "அதற்கென்ன நீங் கள் நபர் ஜாமீன் எழுதிக்கொடுத்தால் போதும். நான் ஹெட் ஆபீசுக்கு எழுதிக் கொள்கிறேன். அதன்பிறகு மாதாமாதம் கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டி விடுங்கள்" என்று சொன்ஞர். அதே ஏஜெண்ட்....!

பாலு வந்துவிட்டுப் போன மறு நாள்தான் அப் படி நடந்தது. பாலுவுக்கும் நான் வேலையிலிருந்து நீக்கப்பட்டதற்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று நினைக்கிறேன். சே...ஒருக்காலும் அப்படி இருக்காது. பாலு இருந்திராவிட்டால் என் திரு மணமே நடந்திராது. பாலு செய்த உதவி மகத்தா னது. ஆ...சென்னை வந்ததும் நாங்கள் எவ்வளவு ஆனந்தத்துடன் புதிய குடும்ப வாழ்க்கையை ஆரம் பித்தோம்? வீட்டின் இரப்பிலே கூடுகட்டி வாழும் சிறு குருவிகள் போல்....நாங்கள் ஒருமனதுடன், உல் லாசமாக உலகம் முழுவதும் சுற்றி வருவோம். உளம் மகிழ வாழ்வோம் என்றெல்லாம் நினைத்தேன். மாந் துளிர்களுடன் வரும் வசந்தத்திலே குயில்களின் ஊட லிலும் கூடலிலும் நிறைந்திருக்கும் இன்ப கானம் போல் எங்கள் காதலிலும் கமலாவின் இன்னிசை

கலந்திருக்கும் என்று நினைத்தேன். ஜோடியாகச் சினிமா, நாடகம் பார்க்கப் போய் வருபவர்களைப் பார்த்து நான் பொறுமைப்பட்டதுண்டு. இனி நாங்கள் உலகில் இருந்த எல்லாக் காதல் இணைகளையும் தோற்கடித்து விடுவோம் என்று நினைத்தேன்.

அமைதி நிறைந்த முழு நிலவிலே, நறுமலர்கள் நிறைந்த இன்பப் பொழிலிலே, இளந் தென்றலிலே... ஆடுவார் ஒரு பக்கம் ஆடிக்கொண்டிருக்கப்பாடுவார்—ஒரு பக்கம் பாடிக்கொண்டிருக்க நாங்கள் உலகை மறந்து நடந்து கொண்டிருப்போம், கையோடு கை கோர்த்து என்று நினைத்தேன்—என் ஆசைக் கனவுகள் எல்லாம் என்னுயின ? என் அன்புக் கோட்டைகள் தான் என்னவாயின ? வாழவே பிறந்த மனிதன் வாழ்விலே ஏன் இப்படி வதைபடவேண்டும் ? வாழ்வில் இத்தனை துன்பங்களும் சூறுவளிகளும் எப்படித் தான் நிறைந்துவிட்டன ? ஏன்தான் இன்னும் இருக்கின்றன ?....

மனித வாழ்வு மனிதர் நிறைந்த சமுதாயத்தில் இத்தனை கொடியதாக இருக்கிறது ? இது எதனுல்...? விலங்கின் கூட்டங்களில்கூட இல்லாத, ஒன்றையொன்று அடித்துக் கொள்ளும் பொறுமை, துவேஷம் தன் இனத்தைத்தான் வெறுக்கிற தீக்குணம் மனிதனிடத்திலே வந்துவிட்டன. அதனுல்தான் என்று நினைக்கிறேன்.

என் அனுபவம் குறைவு ஆனுல்,

பாங்க் ஏஜெண்ட் என்னை அழைத்தார். "மிஸ்டர் ரகுநாதன். நீங்கள் செக்யூரிடி கட்டத் தயாரா....?" அவர் குரல் விபரீதமாக ஒலித்தது. எனக்கு என்ன

சொல்வதென்று புரியவில்லை. நான் ஏற்கனவே அவரிடம் தெரிவித்திருப்பதாக மென்றுவிழுங்கிக்கொண்டு கூறினேன்.

"நான்உங்களுக்காக ரொம்ப வருத்தப்படுகிறேன் மிஸ்டர் ரகுநாதன். ஹெட் ஆபீஸிலிருந்து ஸ்ட்ரிக்டான ஆர்டர் வந்திருக்கிறது. நீங்கள் உடனடியாக செக்யூரிடி கட்டாவிட்டால் நான் உங்களை வேலையிலிருந்து நீக்கவேண்டியிருக்கும்............—மேலே வைத்த இரும்புக் கிராதி திடீரென்று தலைமேல் விழுந்தால் எப்படி இருக்கும்? எனக்கு முதலில் நினைவுக்கு வந்தது வீட்டில் பிரசவ வேதனைப் பட்டுக் கொண்டிருக்கும் என் மனைவியின் முகம் தான்! "ஐயோ நீங்கள் வாக்களித்ததார் அல்லவா நான் வேறு வேலை கூடப்பார்க்கவில்லை," என்றேன். "நான் என்னய்யா வாக்களித்தேன். ஹெட் ஆபீசுக்கு ரெகமெண்ட் பண்ணுகிறேன் என்றேன். அவர்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டால் நான் என்ன செய்யட்டும்?

எனக்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை. தடுமாறிக்கொண்டு வெளியே வந்தேன். நான் எப்படி வீடு வந்து சேர்ந்தேன் என்பது எனக்கேதெரியவில்லை வீட்டிற்கு வந்ததும் வராததுமாக எனக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கும் செய்தியைத் தெரிவிக்க விமலா காத்துக் கொண்டிருந்தாள்...........

என் முதல் குழந்தை....என்னுடைய பிரதிபிம்பம். வளர்ந்து என் வாழ்வை வாழ்நாளுக்கும் மேலாக நீடித்துப் பரம்பரை வளர்க்க வந்த குலக் கொழுந்து........ என் நிறைவேறா ஆசைகளுக்கு, லட்சியங்களுக்கு........ உருக்கொடுக்க எனக்குக் கிடைத்திருக்கும் முதல்

வாய்ப்பு........என் மகன் ! என் மகன்........! ஆனல் அவன் வருகையை மகிழ்ச்சியுடன் வரவேற்க முடிய வில்லை என்னுல். என் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவ மாடாதது என் மாமனுருக்கு ஏமாற்றமாக இருந்தது. சிரித்துக்கொண்டு ஓடிவந்து என்னிடம்கூறிய விமலா முகத்தைக் கவிழ்த்துக்கொண்டு போனுள். "ஏன் ரகு ஒருமாதிரி இருக்கிருய்," என்று கேட்ட என் மாம னுரிடம் 'வேலை ரொம்ப கடினமாக இருக்கிறது. நாளைக்குக் கூட லீவு கிடைக்கவில்லை. கொஞ்சநேரம் நிம்மதியாக இருக்க முடியவில்லையே என்ற கவலை தான்,' என்றேன்.

எனக்கு ஆண் மகவு பிறந்த வைபவத்தைக் கொண்டாட வீட்டில் சர்க்கரையும், பழமும், தாம்பூல மும், மிட்டாய்களும் வாங்கிக் குவித்து வைக்கப் பட்டி ருந்தன. விமலா சர்க்கரையை அள்ளி என் வாயில் போட்டாள். அது இனித்ததா கசந்ததா என்பது எனக்கே புரியவில்லை. எப்படியோ அவர்களுடன் கலந்து நானும் மகிழ்ச்சி உடையவன் போல் காட்டிக் கொண்டேன்.

மறு நாள் காலை நான் தலைவாரிக் கொண்டிருந்த போது ஒரு டின் நிறைய மிட்டாயைக் கொண்டு வந்து கொடுத்து உங்கள் ஆபீஸில் எல்லோருக்கும் கொடுங் கள் என்ருர் மாமனுர். நான் எந்த ஆபீசுக்குப் போகட் டும் ? யாருக்கு மிட்டாய் வழங்கட்டும் ? மிட்டாய் டின் னைத் தூக்கிக்கொண்டு வெளியே நடந்தேன். என் கண்களில் என்னை அறியாமல் கண்ணீர் நிறைந்து கொண்டிருந்தது. என்ன ஆனுலும் சரி........துன்புற் றுப் போய், மனம் உடைந்து வந்திருக்கும் என் மாம

னுரிடம் என் துன்பத்தைக் கூறிவிடக்கூடாது என்று முடிவு செய்து கொண்டேன்.

குப்பத்தின் ஓரத்திலே தலைவிரி கோலமாய், நிர் வாணமாகவும் கந்தல்களோடும் விளையாடிக்கொண்டி ருந்த......சேற்றில் பிறந்து சேற்றிலே வளர்கிற ஏழைக் குழந்தைகளுக்கு கை நிறைய மிட்டாயை அள் ளிக் கொடுத்தேன். துரதிர்ஷ்டவசமாக இந்த உலகத் திற்கு வந்துவிட்ட மனித ஜீவன்களே.......தாய் தந்தை யர்களின் தவறுதலால் இந்தத் தரித்திர வாழ்வுக்கு வந்துவிட்ட ஏழைப் பிராணிகளே....மனித வாழ்வின் எந்தவித நலன்களும் காணுது மண்ணிலே பிறந்து மண்ணிலே மடிந்து போகும் மாண்பில்லாத குழந்தை களே.......இதோ பாருங்கள். உங்கள் கை நிறைய வாங்கி வாய் நிறையத் தின்னுங்கள். உங்களைப் போல் இந்த உலகத்திற்கு, ஏழையாகிப்போன என் வீட்டிற்கு, தவறுதலால் வந்து விட்ட இன்னெரு ஜீவனின் வருகையில் நீங்களாவது மகிழ்ச்சி அடை யுங்கள் என்று சொல்லிக்கொண்டேன் என் மனதிற் குள்ளாக.

அதன் பிறகு என் வேலையைக் கவனிக்கச்சென் றேன். முன்பு என் உத்தியோகம் ஒரு ஆபீசில் ஒரு மேஜை முன்னதாக இருந்தது. இப்பொழுது பல ஆபீசுகளில் பல மேஜைகளின் முன்னுல் நடந்தது. வேலை தேடும் வேலைதான்.

காலை முதல் மாலைவரை ஒவ்வொரு காரியாலயத் தின் வாசற்படிகளிலும் ஏறி இறங்குவது. அங்கே உள்ள மானேஜர். முதலாளி. அல்லது அவர்களுடைய ப்யூன் வறண்ட குரலிலே வேலை காலி இல்லை ஸார்

என்று சொல்வதைக்கேட்டு விட்டு வெறித்துப்போன உள்ளத்துடன் கீழே இறங்குவது. இது என் தொழிலாயிற்று.

எப்படியோ என் நண்பர்களிடமும், இந்தக் குறைந்த காலத்திலே அறிமுகமானவர்களிடமும் ஐந்தும் பத்துமாகக்கடன் வாங்கி ஒரு விதமாக ஒரு மாத காலம் வரைக்குடும்பத்தை நடத்தி என் துன்பத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமலேயே என் மாமனுரையும் விமலாவையும் ஊருக்கு அனுப்பிவைத்தேன். ஆயிரம் தடவை, நான் ஒரு மாதிரியாக இருப்பதைக் குறிப்பிட்டு விட்டுக்குழந்தையை ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ளவேண்டிய முறைகளை உபதேசம் செய்து விட்டு அவர் விடைபெற்றுக் கொண்டார். பாவம் அவர் அன்பு நிறைந்த மனிதர். ஊருக்கு நல்லவராக வாழ்ந்தார். அதே ஊரரால் இன்று காலில்போட்டு மிதிக்கப்படுகிறுர். என்னுல் அல்லவா அவருக்கும் இவ்வளவு துன்பமும் அவமானமும் வந்து விட்டது. அதை நினைக்க என் உள்ளம் எவ்வளவு வருந்துகிறது ?

ஒருநாள் அலுத்துப்போய் வீட்டில் உட்கார்ந்தவுடன் என் துன்பங்கள் எல்லாம் மலை மலையாக எழுந்து என் கண் முன் நிற்க ஆரம்பித்தன. கவலையில் உள்ளம் குன்றிப்போய் உட்காாந்து கொண்டிருந்தேன். கமலா குழந்தையை எடுத்துக்கொண்டு என்னிடம் ஒட வருகிருள். அது எவ்வளவு அழகாகச் சிரிக்கிறது என்பதைக் காட்டத்தான். என் அன்புக் கண்மணியின் சிரிப்பை பார்த்து மகிழ என் உள்ளத்தில் தெம்பெங்கே ? என் துன்பத்தைப் பார்த்துச்

சிரிக்க நீ இன்னும் ஒரு ஆத்மா வந்து விட்டாயா? என்று மனத்துள் நினைத்துக்கொண்டேன். என் உணர்ச்சியற்ற தன்மையைப் பார்த்துக் கமலா ஏமாற்ற மடைகிருள். அவளுக்கு இன்னும் விஷயம் தெரியாது. அவள் தலையை வருடியவாறு உண்மையைச் சொல்லி விடலாம் என்று வாய் எடுத்தேன். ஆனல்...என் அருமை மனைவி...தாய்மையின் இனிய பாசத்துடன் தன் செல்வக் குழந்தையைப் பார்த்துக் கொஞ்சிச்சிரித்து விளையாடுவதைப் பார்த்ததும்... என் துன்ப இருளால் அந்த இன்ப ஒளியை ஏன் அணைத்து விடவேண்டும் என்று நினைத்துப்பேசாமல் இருந்து விட்டேன். எப்படியாவது...எங்காவது ஒரு வேலை சம்பாதித்து விடவேண்டும் என்று உறுதி செய்து கொண்டு எழுந்து நடக்க ஆரம்பித்தேன்.

எத்தனை உறுதிசெய்து கொண்டால் என்ன? எத்தனைதான் அலைந்தால் என்ன? ஒரு பயனும் ஏற்படவில்லை. மீண்டும் மீண்டும் சலித்துப்போய், வெறுப்படைந்து போய் ஓய்ந்துபோய்க் கடைசியாக வீட்டை நோக்கித் தளர் நடை நடக்க வேண்டியது தான் என் தலைவிதியாகப்போய் விட்டது. கடவுளே....

வறுமை என்னை நன்ருகக் கப்பிப்பிடித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டது. ஆயிரம் கால்கள் உடைய சிலந்தியின் கால்களில் அகப்பட்டுக்கொண்ட சிறு பூச்சிபோல் நான் தவிதவித்தேன். நான் இன்னும் மனிதனுக இருந்தேன். என் உயிர் உணர்வு ஆசைபாசம் அத்தனையையும், இதய வேகம், தாபம், ஆற்றல் அறிவு அத்தனையையும் வறுமை கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சிக்குடிக்க ஆரம்பித்து விட்டிருந்

தது. உடலின் வீரியத்தையும் இரத்தத்தையும் உறிஞ்சிக்கொன்று விடுகிற மோகினிப் பிசாசுகளைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், வறுமை அதைவிட மிகமிகக்கொடியது என்பது என் அனுபவம்.

கடன் காரர்கள் என்னை அரித்துத்தின்ன ஆரம்பித்தனர், நண்பர்கள் பகைவர்களாயினர். நல்லவர்கள் என்னைப் பார்த்தும் பாராதவர்போல் முகத்தைத் திருப்பிக்கொண்டு சென்றனர். பால்காரன், மோர்க்காரி, காய்கறி விற்பவள், மளிகைக் கடைக்காரன், வீட்டுக்காரன், துணி வெளுப்பவன்....என்று நான் பாக்கி கொடுக்கவேண்டியவாகளின் பட்டியல் நீண்டு கொண்டே போயிற்று. நான் என்ன செய்வேன். என்னதான் செய்யப் போகிறேன்.

ஒருதடவை என் மாமனுருக்குக்கடிதம் எழுதலாம் என்று நினைத்துப் பேனவை எடுத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். அதுவும் கமலா ரொம்ப வற்புறுத்தியதன் பிறகு.......அன்றுதான் அவருடைய கடிதம் வந்தது.

அவர் நிலம் ஜப்திசெய்யப்பட்ட விவரமும் அவர் ஊரைவிட்டு எங்காவது போய்விடலாம் என்று நினைக்கிற அளவு வெறுப்படைந்து விட்டதாகவும், விமலாவுக்காக இல்லாவிட்டால் எங்காவது பரதேசம் போயிருப்பார் என்றும் எழுதியிருந்தார். நான் அழுவதா சிரிப்பதா...? இரண்டில் எதைச் செய்யவும் நான் சக்தியற்றவனுக இருந்தேன்.

எல்லாம் தெரிந்தும் எவ்வளவு பொறுமையாகக் கமலா என் துன்பங்களிலே பங்குகொள்கிருள். பெண்

களுக்குச் சகிப்புத்தன்மை அதிகம். அதிலும் கமலா ........! அவளாக அல்லாமல் வேறு ஒரு பெண்ணாக இருந்திருந்தால்........நான் பட்டுக்கொண்டிருந்த வேதனையின் இடையில்கடினமாக ஒருவார்த்தைச் சொல்லி விடுகிற மனைவி என் உயிரை வாங்கி விட்டிருப்பாள். ஆம். நான் எத்தனை தடவை தற்கொலை செய்து கொள்வதைப்பற்றி யோசித்திருக்கிறேன். ஆம் தற்கொலைதான். கோழைத்தனம் என்பார்கள் சிலர். கோழைத்தனமாவது வீரத்தனமாவது? மனதில் எந்த வித உணர்ச்சிக்கும், அறிவுக்கும் திறனுக்கும் எதற்குமே இடமில்லாமல் போய்விட்ட பின்னால் கோழைத்தனத்தையும் அதையும் இதையும் பற்றிச் சிந்திக்க நேரம் எங்கே?

கமலா........! அவளைப் பற்றி நினைக்கும் பொழுது என் உள்ளம் உருகுகிறது. அவளுடைய சலனமில்லாத இனிய வாழ்விலே ஏன் தான் நான் குறுக்கிட்டேன்? அவளுடைய களங்கமற்ற கன்னித் தன்மையிலே வகையற்ற என் ஏழ்மைக் கரங்களை ஏன் பதித்தேன்? ஐயோ....நான் என்னென்ன நினைக்கிறேன். எனக்குத் தெளிவாகச் சிந்திக்கும் ஆற்றலும் கூட இல்லாமல் போய் விட்டது. இனிப் பைத்தியம் பிடிக்க வேண்டியது ஒன்றுதான் பாக்கி. அவள் என்னோடு சிரித்து முகத்துடன் பட்டினிகிடக்கிறாள். ஆனால் குழந்தை....? நான் ஏன் தான் இன்னும் உயிருடன் இருக்கிறேன்?

கணவனும் மனைவியும் குழந்தைகளுமாகப் பிச்சை எடுத்துக்கொண்டு போகிறவர்களை நான் பார்த்திருக்கிறேன். நான் அப்படி போகவா...? ஆமாம் இனி

இங்கிருந்தால் அப்படித்தான் நேரும். ஏன்...வீட்டுக்காரர் மட்டும் கொஞ்சம் கருணை காட்டியிராவிட்டால் முன்னமே அப்படித்தான் நடந்திருக்கும். கடைசியாக ...............

மனைவியும் குழந்தையும் பட்டினி கிடப்பதைப் பார்த்துச் சகிக்க முடியவில்லை. தற்கொலை செய்து கொள்வதிலிருந்து எனக்கு வேறு வழி பட்டாளத்தில் சேர்வதாகத்தான் இருந்தது. இல்லா விட்டால் இந்த இரயில் என்னைச் சுமந்து கொண்டு சென்று கொண்டிருக்காது.

கமலா நான் வருவேன் வருவேன் என்று எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருப்பாள். என்னைக் காணுதபோது கண்ணீர் வடிப்பாள். விம்மி விம்மி அழுவாள். ஆனுல் இனிமேல் அவளும் குழந்தையும் பட்டினி கிடக்க வேண்டியிருக்காது. ரெக்ரூட்டிங் ஆபீசில் கிடைத்த அட்வான்ஸ் பணம் அவள் விழித்தெழுந்தவுடன் கையில் கிடைத்திருக்கும். பாவம் எங்கேயோ நேரத்தில் எழுந்து போயிருக்கிறுர். சீக்கிரம வந்து விடுவார். எங்கே கடன் வாங்கினுரோ.... பணம் வைத்துவிட்டுப்போயிருக்கிறுர். அவர் வருவதற்குள் சமைத்து வைக்கவேண்டும், என்று நினைத்து அவசரம் அவசரமாக அரிசி பருப்பு வாங்கிச் சமைத்து வைத்திருப்பாள். அந்தச் சாதம் நான் பட்டாளத்தில் சேர்ந்து விட்டேன் என்பதை அறிந்து அவள் துயரம் மிகுந்து சமையல் செய்யும் எண்ணத்தையே மறந்து உட்கார்ந்திருக்கிறபொழுது உதவும்....கமலா....! கமலு!

* * *

## 11. கமலா

அழுதழுது என் கண்கள் வற்றிப் போய்விட்டன. இனி அழுவதற்கும் சக்தி இல்லே. வழக்கமாக எழுவதை விட அன்று நேரத்திலேயே எழுந்திருந்து விட்டேன். அவரைக் காணேம். சுற்றும் முற்றும் பார்த்தேன் கையில் தட்டுப்பட்ட ஒரு பொட்டலத்தில் இருபத்தைந்து ரூபாய் இருந்தது. எனக்குத் திகீர் என்றது. பிறகும் யோசனே செய்து வேலேக்காக யாரையாவது பார்க்கச் சென்றிருப்பார் என்று நினேத்தேன். அப்படியாஞல் நேற்றிரவு பணத்தை என்னிடம் ஏன் சொல்லிக் கொடுக்கவில்லே என்ற எண்ணம் வந்தது. சரிதான் இரவு நெடுநேரம் கழித்து வந்தார். சொல்லிக் கொடுக்க மறந்து போய் விட்டார் போல் இருக்கிறது. என்று நினேத்துக்கொண்டேன். பல நாட்களாகவே சரியானபடி சாப்பாடு கிடையாது. இன்ருவது வயிருரச் சாப்பிடட்டும் என்று நினேத்து அவசரம் அவசரமாக உப்பிலிருந்து விறகுவரை எல்லாச் சாமான்களும் வாங்கிக் கொண்டு வந்து சமைத்து வைத்தேன்.

நடுப்பகலாகியும் அவர் வரவில்லே. எனக்குப் பயமாக இருந்தது. ஆஞல்....எந்த நிலேமையிலும் என் கண்ணுளர்....என்னே இங்கே தனியாக விட்டுப் போகமாட்டார் என்று நினேத்து மனத்தைத் தேற்றிக் கொண்டேன். எனக்கு இங்கே அவரைத் தவிர வேறு யார் இருக்கிருர்கள். நாங்கள்தான் யாருமற்ற அஞதைகளாயிற்றே ?—இந்த நிலேமை எல்லாம் அவருக்குத் தெரியாமலா இருக்கிறது ?....ஐயோ அவர் என்னே உயிரைவிட அதிகமாக நேசிக்கிருர். சாவாஞலும்,

வாழ்வானுலும் அது எங்கள் இருவருக்கும் சேர்ந்து தான் வரவேண்டும். எதிலுமே நாங்கள் தனியாகப் பங்குகொள்ள முடியாது என்றெல்லாம் நினைத்துக் கொண்டேன். வறுமை எங்கள் வாழ்வின்மேல் படையெடுத்த நாள் முதலாகவே ஒழுங்கு முறை அமைதி எல்லாமே கெட்டுப்போய் விட்டன. அத்தான் எப்போது வருவார் எப்போது சாப்பிடுவார் என்பதற்கெல்லாம் ஒரு நிச்சயமும் கிடையாது. வேதனையில் அவர் உள்ளம் மிகவும் நொந்து போய்விட்டது. அவருக்குச் சாப்பிடவே தோன்ருது. வீட்டில் நான் சாப்பிடாமல் அவர் வருகையை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பேன்........வழிமேல் விழி வைத்து ஒவ்வொரு கணமும் அவர் வருகையின் மேலேயே உயிர் வைத்துக்கொண்டிருப்பேன் என்று நினைத்துத்தான் அவர் திரும்பி வருவார். அவரைச் சாப்பிட வைப்பதற்குள் நான் எவ்வளவு கஷ்டப் படுவேன்....ஐயோ நான் எப்படி வாழ்வேன்....?

கண்ணீர் கொப்புளித்துக் கொண்டு வருகிறது. துயரம் நெஞ்சை அடைக்கிறது. பெண்ணுய்ப்பிறந்து விட்ட எனக்கு அழுவதைத் தவிர வேறு என்னதான் தெரிந்திருக்கிறது. கடவுளே நான் என்ன செய்வேன்....?

எங்கள் வாழ்வை வறுமை தின்று விட்டது. நடுக்கடலில் திசைகாணுதலையும் கலம்போல் நான் தவிக்கிறேன். நம்பிக்கை என்ற அஸ்திவாரம் கல்கலத்துப்போன பின்னுல் வாழ்க்கைக் கட்டிடம் சரிந்து கொண்டிருக்கிறது. அவர் அங்கே....நான் இங்கே.... எப்போதாவது உயிருடன் சந்திப்போம் என்கின்ற நம்பிக்கையே இல்லாமல்....ஐயோ....என்னுல் சிந்திக்க

முடியவில்லையே....நினைக்க நினைக்க அழுகை குமுறிக் கொண்டு வருகிறதே... நான் என்ன செய்வேன்?

எவ்வளவு அன்புடனும் ஆசையுடனும் நாங்கள் புதுக் குடும்பம் அமைத்துப் புதுவாழ்வு நடத்தினோம்? என்னை மகிழ்ச்சியுடன் வைத்திருக்க அவர் எவ்வளவு பாடுபடுவார்? என் அன்புக் கண்ணாளன் ஒரு கணம் என் முகம் சோர்ந்தால் எவ்வளவு வேதனைப்படுவார்? இப்பொழுது நான் அழுதழுது சாகிறேன். எனக்கு ஆறுதலாக ஒரு வார்த்தை கூறக் கூட யாரும் இல்லையே....என்னை ஏன் தான் விட்டுச் சென்றீர்....என்னை விட்டுப்போக உங்களுக்கு எப்படித்தான் மனம் வந்தது. கமலூ....நாம் மூவரும் கொஞ்சம் விஷம் சாப்பிட்டுவிட்டு உயிரை விட்டு விடுவோம். அது ஒன்று தான் இனி நாம் செய்யக்கூடியது என்று அன்றொரு நாள் கூறினீரே....அதைப்போல் செய்திருக்கக் கூடாதா....? அன்று நான்தான் தடுத்து விட்டேன். பாபி! ....இல்லாவிட்டால் இன்று எனக்கு இக்கொடிய துன்பம் வந்திராதே....?

சமைத்து வைத்த சாப்பாட்டுடன் அவர் வருவார் வருவார் என்று காத்துக் கொண்டிருந்தேன். பொழுது சாயச் சாய எனக்குத் திகில் அதிகரித்தது. இன்னும் காணோமே இன்னும் காணோமே என்று என் நெஞ்சு திக் திக்கென்று அடித்துக் கொண்டது. இதோ வந்துவிடுவார். இன்னும் சற்று நேரத்தில் வந்து விடுவார் என்று மனதைத் தேற்றிக் கொண்டே அழுகின்ற குழந்தைக்குக் கொஞ்சம் சாதம் ஊட்டிக் கொண்டிருந்தேன். அந்தச் சேவகன் கொண்டுவந்த கடிதத்தைக் கொடுத்தவுடனே எனக்குப் பாதி உயிர் போய்விட்டது. சாவோலை கண்டதுபோல் நான் நடுங்

கினேன். ஆனால்...., இன்னும் சற்று நேரத்தில் உன் உயிர் பிரிக்கப்படப்போகிறது என்று எழுதியிருந்தால் கூட நான் அவ்வளவு துயரம் அடைந்திருக்கமாட்டேன்.

கண்மணி கமலா....

உயிருக்குப் போராடும் இந்த வாழ்க்கையை என்னால் பொறுக்க முடியவில்லை என் உயிரைவிட அதிகமாக நேசிக்கும் நீயும் நம் கண்மணிக் குழந்தையும் என் கண் எதிரே பட்டினி கிடப்பதைப் பார்த்துச் சகித்துக்கொள்ள என்னால் முடியவில்லை. இனி இங்கே ஒருநாள் தாமதிப்பது கூடத் தற்கொலை போன்ற விபரீதமான முடிவுக்குத்தான் கொண்டு வந்துவிடும்.

கமலா....என் அன்பே, என்னை மன்னித்து விடு. நான் எங்கோ செல்கிறேன். தொலை தூரத்திற்கு! நான் பட்டாளத்தில் கீழ்த்தர அதிகாரியாகச் சேர்ந்து விட்டேன் என்று சொன்னால் உனக்கு நான் என்ன ஆனேனோ ஏது ஆனேனோ என்று கவலைப்பட வேண்டியிருக்காது என்று நினைக்கிறேன். கமலா நம்வாழ்வைச் சின்னபின்னமாக்கி விட்ட வறுமைப் பகையைத் துரத்தி அடிப்பதற்கு அதைவிட வேறு வழியே இல்லை. உன்னைப் பிரிய நினைக்கும்பொழுது எவ்வளவு துயரத்துடன், சகிக்கமுடியாத வேதனையுடன் பிரிகிறேன் தெரியுமா....? கமலா என்னால் எழுத முடியவில்லை!

நாம் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருந்தோம். இனிவாழ்வைநோக்கிமுன்னேறியாகவேண்டும்.

கமலா...இங்குள்ள நிலைமைகள் தெரிந்தால் ஏற்கெனவே மனம் உடைந்து போயிருக்கும் தந்தை மிக

வும் வருத்தப்படுவாரே என்று நினைத்து நான் அவருக்குக்கூட எழுதவில்லை. வீட்டுக்காரருக்கு எழுதியிருக்கிறேன். அவர் உன்னைப் பெற்ற மகள் போல் பார்த்துக்கொள்வார். கடன்காரர்கள் எல்லோருக்கும் ஒரு மாதம் தவணை சொல்லி வை. நான் அடிக்கடி கடிதம் எழுதுகிறேன், நீயும் எழுது, இனி அதுதான் நாம் சந்திக்கும் வழி........

கமலா....என் கண்ணே வருகிறேன்.

குறிப்பு: அடுத்த கடிதத்தில் விலாசம் எழுதுகிறேன்.

நேரம் போனது தெரியாமல் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தேன். விளக்குக்கூட ஏற்றி வைக்கவில்லை. பகல் மறைந்து இரவு வந்ததும் பாதிப் பொழுது கழிந்திருக்க வேண்டும். குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது. ஜன நடமாட்டம் கூட இல்லை. யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. அந்த அவ நேரத்தில் கதவை இடிப்பவர்கள் யார் என்ற சந்தேகத்துடன் ஜன்னலைத் திறந்து பார்த்தேன். வீட்டுக் காரரின் நரைத்ததலையும் கைத்தடியும் காட்சி அளித்தன. போய்க் கதவைத்திறந்தேன். ஹி ஹி ஹீ....என்று பல்லை இளித்துக் கொண்டு, "மனசு கேக்கலேம்மா.... பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்...." என்று சொல்லிக்கொண்டே உட்கார்ந்தார். அவர் பார்வையும் செயலும் ஒரு விதமாக இருந்தன. இவர் தான் என்னைப் பெற்ற தந்தை போல் பார்த்துக் கொள்வார் என்று அத்தான் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். ஏன் என் தந்தையைவிட அதிகம் வயதானவராகத் தான்

இருப்பார் — ஐயோ....அப்பா...இனி நான் உங்களை என்றாவது சந்திப்பேனா..........?

சுற்றும் முற்றும் பார்த்துக்கொண்டே வீட்டுக்காரன், "குழந்தை எங்கேம்மா? தூங்குகிறதா........?" என்று கேட்டார். "ஆமாங்கய்யா என்றேன் நான்."

"பாவம் இத்தனை காலம் ரொம்பக் கஷ்டப்பட்டே ....இனிமேலாவது கொஞ்சம் சுகமா இரு....பாவம் உலகம்தெரியாத சின்னப்பொண்ணு அம்மா நீ....உனக்கு விபரம் தெரியலை. இங்கே பட்டனத்திலே எல்லாம்.... பொழைக்கறதுக்கு எத்தனையோ வழி இருக்குதம்மா.... ஆம்பிளைக்கிட்ட சம்பாத்தியம் இல்லாத போனாக்கூட பொம்பிளைகளே சமாளிச்சுக்கலாம். ஹி ஹி ஹீ.... உனக்கு ஒண்ணும் தெரியலை........" உபதேசம் செய்து கொண்டே கொட்டாவி விட்டு உடலை நெளித்தார். "உங்களுக்குத் தூக்கம் வருகிறது போல் இருக்கிறது. போய்ப் படுத்துக் கொள்ளுங்கள் ஐயா....எங்களால் உங்களுக்கும் கஷ்டம்...." என்றேன். 'ஊம் ஹூம் ....அதெல்லாம் ஒண்ணும் இல்லை அம்மா. உனக்காக எவ்வளவு கஷ்டம் வேணும்னாலும் படலாம். வாடகைக்கெல்லாம் நான் ஒண்ணும் உன்னைத்தொந்தரவு பண்ணமாட்டேன். இன்னும் ஏதாவது பத்து அஞ்சு வேணும்னாலும் என்னைக் கேட்டு வாங்கிக்கோ........ உனக்கு உபகாரம் பண்ணவேணும்னு ரொம்ப நாளா ஆசை. சமயம்தான் கிடைக்கலை" என்றார்.

"நீங்கள் எங்களுக்கு எத்தனையோ உபகாரம் செய்திருக்கிறீர்கள் ஐயா...அதுவே ரொம்ப அதிகம். நீங்கள் ரொம்ப தூரம் போகவேண்டும். நேரமாகி விட்டதே....?

"போகாவிட்டால் என்ன....பரவா யில்லை. நான் இங்கேயே படுத்துக் கொள்கிறேன்" என்றார் கிழவர். அனுதாபம் உள்ள ஒரு பெரிய மனிதர் சாதாரணமாகச் சொல்லக்கூடிய வார்த்தைகள்தான் அவை. ஆனால் இந்தக் கிழவர் பார்த்த பார்வையும் சிரித்த சிரிப்பும் இருக்கிறதே....என்னைத் தூக்கிப் பாதாளத்தில் எறிவதுபோல் இருந்தது. அடப்பாபீ....இவனுக்கு இவ்வளவு வயதாகியும் இந்தப்புத்திவிட வில்லையே.... என்று நினைத்துக்கொண்டு, "வேண்டாம் ஐயா.... இரவு நேரத்தில் அவர் இல்லாத சமயத்தில் நான் யாரையும் தங்கவிட மாட்டேன்...." என்றேன். "என்ன புள்ளே விபரம் தெரியாமே பேசறியே.... ஒரு பெரிய மனுஷன் உனக்காக இவ்வளவு தூரம் நடந்து வந்திருக்கறான்....பணமும் கொடுக்கறேன்கறான்...." என்று சொல்லிக்கொண்டே எழுந்து என் கையைப் பிடித்து...

எனக்கு வந்த ஆத்திரத்தில் நான் என்னசெய்தேன் என்பது தெரியவில்லை. எனக்கு எப்படித்தான் அவ்வளவு பலம் வந்ததோ எனக்கே புரியவில்லை அந்தப்பெரிய மனிதன் கன்னத்தை அழுத்திப்பிடித்துக்கொண்டு தரைமேல் கிடந்தான். "போ வெளியே" என்று கர்ஜித்துக் கொண்டிருந்தேன் நான். சில நிமிஷங்களுக்குப் பிறகு அவன் கோபத்துடன் எழுந்திருந்தான். "நானு வெளியே போக வேண்டும். போடீ வெளியே....நாலுமாச மாச்சு வாடகை கொடுத்து. வீடு கட்டி வெச்சவ மாதிரி என்னை வெளியே போங்கறான்..." என்று கூப்பாடு போட்டான். எனக்கு அப்பொழுதுதான் சுய நினைவு வந்தது. ஆமாம், அவனுக்கு வாடகை கொடுத்து

நான்கு மாதங்கள் ஆகிவிட்டன. பட்டணத்தில் எங்கேயுமே அப்படி இருக்க முடியாது. எந்த வீட்டை விட்டு வெளியே போகும்படி நான் அவனுக்குக் கட்டளையிட்டேனே அந்த வீட்டின் நிழலை மிதிப்பதற்குக்கூட எனக்கு அருகதை கிடையாது ஆனல்....

அவன் காலன்போல் கன்னுப்பின்னுவென்று பேசிக்கொண்டு நிற்கிறான். இனி அந்த வீட்டிலே அரைக்கணம்கூட நிற்க முடியாது. என் காதலர் கடிதம் எழுதுவார். அவருடைய கடிதத்தைப் பெறக்கூட வழி இல்லாமல் போய் விடுமே....? என் தந்தையைப்போய்ச் சேரக்கூட எனக்கு வழி கிடையாதே....? திக்கற்ற நான இந்தப்பொல்லாத உலகத்தில் எப்படி வாழ்வேன். யோசனை செய்த வாறு நான் கண்ணீர் வடித்துக்கொண்டு நின்றேன். என் உடல் கிடுகிடென்று நடுங்கிக்கொண்டிருந்தது. எத்தனை நேரம் நான் அப்படி நின்று கொண்டிருந்தேனே....? அவன் பேசுகிற வரைபேசிச்சலித்த பிறகு சிறிது நேரம் நின்று என்னை உற்றுப்பாரத்து விட்டு அருகே வந்து "புத்தி வந்ததா புள்ளே...." வெளியே போன வீணுக் கெட்டுப்போவே....காலிப் பசங்க உன்னை லேசில்விட மாட்டாங்க. பேசாமே நான் சொல்றதைக் கேட்டுட்டு வீட்டோட்டே இரு, என்றான். நான் பேசவில்லை, அவன் துணிவடைந்து! என் கண்ணீரைத் துடைக்க வந்தான்.

சற்று முன்பு எனக்கிருந்த வலிவெல்லாம்எங்கோ தான் போய்விட்டதோ தெரியவில்லை. அவன் தொட்டிருந்தால் நான் விழுந்திருப்பேன். ஆனல்....நான் பேசாமல் நடுங்கிக் கொண்டே போய் என் குழந்தை

யைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு வெளியே நடந்தேன். அவன் ஒன்றும் பேசவில்லை. வெளியே என்னை வரவேற்க காரிருளும், அதைவிடக் கரிய நெஞ்சம் படைத்த உலகமும் காத்துக் கொண்டிருந்தது.

* * *

## 12 மாணிக்க முதலியார் :

கமலாவின் வீடு பூட்டிக் கிடந்தது. பட்டணத்திற்கு வந்ததும் நான் எவ்வளவு வேகமாக ஓடி வந்தேன். என் மகளைக் காணும்....! அக்கம் பக்கம் விசாரித்ததில் இரண்டு நாளைக்கு முன்னுல் ரகு எங்கேயோ போனவன் திரும்பி வரவில்லை என்றும் அன்றிரவு கமலாவும் எங்கேயோ போய்விட்டதாகவும் கூறினார்கள். ரொம்ப காலமாகவே ரகு வேலை இல்லாமல் திண்டாடிக் கொண்டிருந்ததாகவும் வறுமையில் என் மகள் ரொம்பவும் சீரழிந்ததாகவும் கூறினார்கள். என் காலடியில் பூமி பிளந்து விட்டதுபோல் நான் படு பாதாளத்தில் இறங்கிக் கொண்டிருக்கிறேன். ஐயோ கஷ்டப்படுகிறோம் என்று எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கக் கூடாதா ?

என் மகளைத் தேடாத இடம் இல்லை. ஆறுகுளம் குட்டைகள் உட்பட எல்லாம் தேடிவிட்டேன். கடற்கரையில் மூன்று நாட்களாகக் காத்துக் கொண்டிருந்தேன். என் மகள் தற்கொலை செய்து கொண்டாளோ என்று நினைக்க என் உள்ளம் எவ்வளவு வேதனை அடைகிறது. நான் அவளை என்ருவது காண்பேனு...? கமலா....நீயாவது எனக்கு ஒரு வார்த்தை....

ஒரே ஒரு வரியாவது எழுதிப் போட்டிருக்கக் கூடாதா? உனக்குமா அம்மா என்னைத் தெரியாமல் போயிற்று?

வறுமையில் என் மகள் என்ன பாடு பட்டாளோ என்று நினைக்க என் உள்ளம் துடிக்கிறதே? அவள் பட்டினி கிடந்திருப்பாள். குழந்தை பாலின்றி அழுது இருக்கும்....பட்டுடைகள் தரித்த மேனியில் பாழும் கந்தைகளைச் சுற்றிக்கொண்டு எண்ணெய் கிடையாத தால் சீவாது சீக்குப் பிடித்த சிகையுடன் காட்சியளித் திருப்பாள். என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லையே? கமலா....என் கண்ணே கமலா...!

அலைந்து அலைந்து என் கால்கள் சலித்து விட் டன. தேடித் தேடி என் கண்கள் பூத்துவிட்டன. நடந்து நடந்து என் உடல் அலுத்துவிட்டது....என் உள்ளம் அலுக்கவில்லை. கமலா....உன்னை நான் எப் பொழுது காண்பேன்?

கையில் கொண்டு வந்த பணம் தீர்ந்து விட்டது. விமலாவும் நானும் ஓட்டலில் தங்கியிருந்தோம். இனி நாங்களும் சாப்பாட்டிற்குத் திண்டாடவேண்டிய நிலை மை வந்து விடலாம். கவலைகளுக்கிடையே நான் நடேச முதலியாரைப் பார்க்கப்போனேன். அவர் பட்டணத்தில் ஒரு பெரிய புள்ளி. சினிமாக் கம் பெனிகளை எல்லாம் தெரியும். சங்கீத சபைகளிலே அவருக்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. ரேடியோ விலும் அவருக்கு வேண்டியவர்கள் இருக்கிறார்கள். அவர் கடிதம் எழுதியிருந்தார். விமலாவுக்கு ஏதாவது சான்ஸ் கிடைக்கவேண்டும். அதைக் கொண்டுதான் இனி நான், பிழைக்கவேண்டும். கேஸ் நடத்த வேண் டும். நான் எப்படிப்பட்ட நிலைமையில் இருந்தேன்.

எந்த நிலைமைக்கு வந்து விட்டேன். துன்பங்கள் என் தான் என்னைத் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கின்றன ?

நடேச முதலியார் என்னைப் பார்த்ததும், "ஏன் இப்படி இளைத்துப் போய்விட்டீர்கள் ?" என்று கேட்கிறார். என்னுடைய சூழ்நிலைகள் அவருக்குத் தெரிந்திருந்தால்......? நான் விஷயத்தைச் சுருக்கமாகச் சொன்னேன். மறு நாள் மாலை நடக்கும் பாரதி சங்கீதப் போட்டியில் கலந்து கொள்ளும்படியும் பரிசு பெற்றாலும் பெறாவிட்டாலும் விமலாவுக்கு அதனால் நன்மை ஏற்படும் என்றும் கூறினார். அவருடைய வீடே ஒன்று காலியாக இருப்பதாகவும் அதில் நாங்கள் வசிக்கலாம் என்றும் சொன்னார். உளம் நிறைந்த நன்றியோடு அவருக்கு வணக்கம் தெரிவித்து விட்டுப் புறப்பட்டேன். மீண்டும் கமலாவைத் தேட....நான் எங்கு சென்று தேடுவேன் ?

எத்தனை நாட்களாகியும் கமலாவைப்பற்றிய தகவலே ஒன்றும் கிடைக்கவில்லை. அவள் என்ன ஆனளோ குழந்தை என்ன ஆயிற்றோ ? ரகு என்ன ஆனனே ஒன்றும் புரியவில்லை...கமலாவைப் பற்றி நினைக்கும் பொழுது என் உள்ளம் திகீர் என்கிறது. கவலை என்றால் இன்னதென்றே அறியாதபடி நான் அவளை வளர்த்தேன். அவள்......!

விமலா பாரதி பாட்டுப் போட்டியில் முதல் பரிசு பெற்றாள். அவளுடைய சங்கீத ஞானம் பெரிய வித்வான்களைக்கூடக் கவரும் தன்மை வாய்ந்ததாக இருந்ததென்றால்....? ரேடியோவிலும் சினிமாவுக்குப் பின்னணிகள் பாடுவதிலும் அவளுக்கு நிறையச் சந்தர்ப்

பங்கள் கிடைக்கின்றன. எங்கள் வாழ்க்கை உருண்டு கொண்டிருக்கிறது. ஆனல்....விமலா பாட வாய் திறந்தால் என் உள்ளம் கமலாவைத் தேடி ஓடுகிறது. என் கண்களில் நீர் தேங்குகின்றது. என் பெற்ற மனம் பித்துப் பிடித்தலேகிறதே....! நான் என்ன செய்வேன் ?

கமலாவின் வாழ்க்கைத் தேர்....திக்குத் தெரியாத காட்டில் சேற்றில் மூழ்கித் தத்தளித்துக் கொண்டிருக்கிறது. விமலாவின் வாழ்க்கையும் ஆரம்பித்துக் கொண்டிருக்கிறது. ஒரு மகளைப் பிரிந்த துயரத்திலே நான் தத்தளித்துக் கொண்டிருக்கிறேன். இவளுடைய வாழ்க்கையாவது நல்லபடியாக அமைய வேண்டுமே என்று நினைத்தால்....?

நடேச முதலியார் மகன் சபேசன் விமலாவைக் காதலிக்கிருன். முதலியாருக்கும் அவளிடம் அளவு கடந்த பிரியம். அவளுடைய வயதுக்கு இந்த அளவு சங்கீத ஞானம் எங்குமே பார்த்ததில்லை என்பது அவர் அபிப்பிராயம். அவளைத் தம் மருமகளாக்கிக் கொள்ள வேண்டும் என்பது அவருடைய ஆசையும்தான். கடவுளே விமலாவுக்காவது வாழ்க்கை நன்ருக அமைய வேண்டுமே என்று, நினைத்தால்....?

ஒரு நாளாவது கமலாவைப்பற்றி நினையாமல் இருக்க முடியவில்லை. இந்தக் கொலேகார உலகத்தில் அவள் என்ன பாடுபடுகிருளோ என்று நினைத்து நினைத்து என் உள்ளம் வெதும்பிக்கொண்டிருக்கிறது. கமலா...என் உள்ளத்தில் அனலேற்றிவிட்டு எங்கம்மா சென்று ஒளிந்து கொண்டாய்.

* * *

## 13. கமலா.

பேயும் நடு நடுங்கும் பாழும் இருளிலே நான் புறப் பட்டேன். என் கண்களில் கண்ணீர் வழிந்து கொண் டிருந்தது. கையிலே காசில்லை. கட்டியிருந்த கந்தைத் துணியைத் தவிர வேறு துணியும் கிடையாது. அத் தான் வைத்துவிட்டுப்போனபணத்தின் மீதியைக்கூட வீட்டிலேயே விட்டு விட்டேன். என் உள்ளத்திலே பயங்கரமான சிந்தனைகள் போய்க் கூத்தாடிக்கொண் டிருந்தன. எனக்கு வாழ்க்கையிலே நம்பிக்கையற்றுப் போய்விட்டது. நான் எங்கு போய்க் கொண்டிருந் தேன்........

ஓடுகின்ற ரயில்....பயங்கரமாக என் மனக்கண் முன்னே இரைந்து கொண்டு ஓடி வந்து கொண்டிருந் தது. நல்ல பாம்பு படமெடுத்துச் சீறிக்கொண்டிருந் தது. ஆழமான கிணறு தன் அகலவாயைத் திறந்து என்னை வாரி விழுங்கிவிடுகிறேன் என்றது, அலைக் கின்ற கடல் தன் ஆயிரம் கரங்களை நீட்டி வா வா வென்றழைத்தது அவற்றை நான் மனமார வாழ்த் தினேன். வாயார நன்றி செலுத்தினேன். வாழ வழியற்றுப்போன ஏழைகளுக்கு....என்னைப் போன்ற திக்கற்ற அபலைகளுக்கு இடம் கொடுக்கத் திறந்த உள் ளத்துடன் காத்துப் கொண்டிருக்கும் இயற்கையின் செல்வங்களே....என்னை ஏற்றுக்கொள்ளுங்கள். நான் அனாதை....அபலை...இந்தக் கொடிய உலகத்திலே பிழைக்கத் தெரியாத பேதைப் பெண்....என் கணவர் கைவிட்டுச் சென்றுவிட்டார். நீங்களும் என்னைக் கை விட்டு விடாதீர்கள் என்று என் உள்ளம் இரைந்து கொண்டிருந்தது.

கருமுகில்களுக்கிடையிலே தெரிந்த நட்சத்திரங்களில் ஒன்று உதிர்ந்து விழுந்தது. அங்கே அந்த வானத்தில் எத்தனையோ நட்சத்திரங்கள்....! உதிர்ந்து விட்ட அந்த நட்சத்திரத்திற்காகக் கண்ணீர் விடுவார் யாருமில்லை. கவலைப்படுவார் யாருமில்லை. கவனிப்பார் இல்லாத ஒரு நாய் நின்று ஊளையிட்டது. அந்த நாயாகப் பிறந்திருந்தால் நான் வாழ்ந்திருக்க முடியும்! நடமாட்டமற்ற சாலைகளிலே நெடுங் கரங்கள் நீட்டி நின்ற மரங்கள் காற்றில் சல சலத்தன. சாவை நோக்கி நடந்து செல்லும் இந்த அபலையைக் கண்டு அவை பயன் படா வேதனையைத் தெரிவித்துக்கொள்கின்றன. ஹூம்....மனிதர்....அந்த உணர்ச்சி கூட உண்மையாகக் காட்டப் போவதில்லை.—உயிருடன் இருக்கும் வரை ஏசுவர் பேசுவர். செத்த பிணமாய்க் கண்டால் சுச் சுச் சூ....என்பர்.

தூரத்திலே கோட்டான் ஒன்று அலறியது. காலதேவனின் அழைப்பு....இதோ என் வாழ்க்கை முடியப் போகிறது. உலகத்திலே நான் இருந்த இடம் சூன்யமாகப் போய் விடும். தற்கொலை செய்து கொள்ளும் எனக்கு நரகம் தான் கிடைக்கும். நரகத்தின் வாயில்கள் என் வருகைக்காகத்திறந்து வைக்கப்பட்டிருக்கும் பரவா இல்லை. நரகம் உலகத்தைவிட நல்லதாகத்தான் இருக்கும். அங்கே துன்புறுவார் இருக்கலாம். வேதனைகள் இருக்கலாம். ஆனால், காமுகர்கள் இருக்க மாட்டார்கள். மனிதரை விலைபேசும் மனிதர்கள் இருக்க மாட்டார்கள். ஏமாற்றும், வஞ்சிக்கும், இச்சகம் பேசி இழுத்துப் பறிக்கும் எத்தர்கள் இருக்க மாட்டார்கள், நரகம் உலகத்தை விட இனியதுதான். நான் அங்கு செல்வேன்....!

நான் வேகம்வேகமாக நடந்து கொண்டிருந்தேன் எங்கோ ஒரு தாலாட்டுக் கேட்டது. ஏதோ ஒரு குடிசை யில் நள்ளிரவில் விழித்துக்கொண்ட ஒரு குழந்தையை அதன் தாய் தூங்கப் பண்ணுகிறாள். இவர்களெல்லாம் வாழ்கிறார்கள்! நான் மட்டும் சாகப் போகிறேன். என் குழந்தை....!

என் இதயம் விம்மியது. வாய் விட்டுக் குமுறி அழாமல் இருக்க முடியவில்லை. என் செல்வத்தைப் பார்த்துக் கொண்டேன். அத்தான்.......இதற்காகவா என்னை விட்டுப் போனீர்கள். அத்தான்....ஆருயிர் அத்தான்....இதற்காகவா என்னை விட்டுப் போனீர் கள். நான் ஒன்றும் தெரியாதவள். இவ்வளவு கொடிய உலகத்தில் இந்தப்பேதை எப்படித் தனித்து வாழ்வாள்என்றுசிந்தித்தீர்களா? அத்தான் நான் சாகப் போகிறேன் அத்தான். போர்க்களத்திலே....எங்கோ தொலை தூரத்திலே இருக்கும் உங்களுக்கு இந்தச்செய் தியை யாரும் வந்து சொல்லப் போவதில்லை. ஒரு சம யம் நீங்கள் திரும்பி வரலாம் என்னைத் தேடி என் அருமைக் குழந்தையைத் தேடி ஓடி வரலாம். ஆனால் நீங்கள் எங்களைக் காணமாட்டீர்கள். நீங்கள் எப்படி எங்களிடம்சொல்லாமல் ஓடிப்போனீர்களோ....அதைப் போல் நாங்களும் உங்களிடம் சொல்லாமலேயே ஓடிப்போகிறோம். மீண்டும் சந்திக்க முடியாத இடத் திற்கு........அத்தான்......எங்களை அப்பா விடமாவது சேர்த்து விட்டுப்போனீர்களா....? ஐயோ....யாரை வாழ்விப்பதற்காக நீங்கள் பட்டாளத்தில் சேர்ந்து படு களத்திற்குப் போனீர்களோ......அவர்கள் அதே காரணத்தால் வாழ முடியாதவர்களாகிச் சாவை நோக்

கிச்சென்று கொண்டிருக்கின்றனர். அத்தான்....! என் அப்பா அறிந்திருந்தால்...?

அப்பாவைப்பற்றி நினைக்கும்போது........ஐயோ துன்பம் சகிக்க முடிய வில்லையே....என் இதயம் இப்படியே வெடித்துப் போகாதா....? அப்பா....எங்களை அருமையாக வளர்த்த அப்பா...இனி நீங்கள் எங்களைக் காணப்போவதில்லை. எங்கள் முடிவைப்பற்றி அறிந்தால் நீங்கள் மனம் உடைந்து மடிந்தே போவீர்கள். ஆனல், நீங்கள் வாழவேண்டும். விமலாவுக்காக....!—ஐயோ நான் மட்டும் ஏன் வாழக்கூடாது ? என் கண் மணிக்காக....

நான் என் செல்வத்தினுடைய முகத்தைப்பார்த்துக்கொண்டேன். அதற்குமேல் என்னல் நடக்க முடியவில்லை. அங்கேயே உட்கார்ந்து விம்மி விம்மி அழுது கொண்டிருந்தேன். நேரம் போனது தெரியாமல்.

கோழி கூவியிருக்கும், காகங்கள் கரைந்தன. பொழுது விடிந்து கொண்டிருந்தது. நான் எதையுமே உணர்ந்தவள் அல்ல நான் அப்படியே சாலையின் நடுவே உட்கார்ந்து என் செல்வத்தை இறுக அணைத்தபடி உறங்கிக் கொண்டிருந்தேன்.

பெண்களின் பேச்சுக்குரல் கேட்டு நான் விழித்தேன். "யாரோ பாவம் சின்னப்பொண்ணு...." என்று சொல்லிக்கொண்டிருந்தாள் ஒருத்தி. "நடு ரோட்டில் தூங்கருளே....ஏதாவது மோட்டார் கீட்டார் வந்தால்..." என்ருள் இன்னெருத்தி, நான் விழித்துக் கொண்டதைப் பார்த்ததும், "ஏன் அம்மா இப்படித் தூங்கறே....குழந்தையையும் கையிலே வெச்சுக்

கிட்டு...” என்று கேட்டாள் ஒருத்தி என் குரல் தடுமாறிற்று 'நான் சாவதற்கு வந்தேன்' என்று சொல்லியிருப்பேன் என்று நினைக்கிறேன். “அடப் பேசம்மா....பைத்தியக்காரியா இருக்கறியே....அப்படி வலிய வலிய உயிரை விட்டுடறதுன்னு முடியற காரியமா...? எந்திரியம்மா....இந்தப் பெரிய உலகத்திலே உனக்குத்தானு பொழைக்கறதுக்கு வழி இல்லாமேப் போச்சு....? என்ருள் வயது முதிர்ந்தவளாகக் காணப்பட்ட ஒரு மாது. நிராசை நிறைந்த கண்களுடன் அவளைப் பார்த்து “பிழைக்கறதுக்கு வழி இருக்கிறதா...நான் அனுதையம்மா...” என்று கூறினேன். பேசும் முன் துயரம் நெஞ்சை அடைத்தது. கண்ணீர் பீறிட்டது. அவள் குனிந்து என் கண்களைத் துடைத்துக்கொண்டே, “உடம்பு வளைஞ்சு பாடு பட்டா உசிரு பிழைக்கறதுக்குத்தானு மார்க்கம்இல்லே பக்சைக் குழந்தையையும் வெச்சுக்கிட்டு சாகப் போறேங்கறயேம்மா....என்ன பொண்ணு நீ” என்று சொல்லிக்கொண்டே குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

இரவெல்லாம் என்னைக் கூவி அழைத்த சாவு என் கண் முன்னுல் இருந்து பின் வாங்கிவிட்டது. இப்பொழுது வாழ்வின் குரல் கேட்கிறது. பசிய மரங்களின்மேலே இருந்து பறவைகள் கல கல வென்று பாடிக் கொண்டிருந்தன. அவை வாழ்கின்றன. வாழ்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றின் வாழ்வில் தற்கொலைச் சிந்தனை இருக்கிறதா....நான் எழுந்திருந்து அவர்களோடு நடந்தேன்.

அன்று முதல் நானும் 'வாழ' ஆரம்பித்தேன். சாலைகளிலே கற்கள் உடைத்தேன். ரோலர் இழுத்தேன். நெல் அரைக்கும் இயந்திர சாலையிலே நெல் எடுத்துக் கொட்டினேன். வீடு கட்டினேன். கிடைத்த வேலையைச் செய்து கிடைத்த கூலியைப் பெற்று நானும் என் குழந்தையும் உயிர் வாழ்ந்து வந்தோம். நான் எங்கே வேலைக்குப் போனாலும் அங்கே என் செல்வத்தையும் எடுத்துப் போவது வழக்கம். அவன் சாலைகளிலே புளியங் கொம்புகளில் கட்டிய தூளிகளில் உறங்கினான். இயந்திரசாலைகளின் கூடங்களில் விளையாடினான். கடவுளே....எங்களுக்கு இந்த வாழ்வு வரும் என்று நான் கனவிலாவது கருதியிருப்பேனா....?

நான் ஒன்று மட்டும் கற்றுக் கொண்டேன். "வாழ்வு என்பது மாடி வீடுகளிலும் பணம் உடையவர்களிடையே மாத்திரமும் அடைந்து கிடப்பதல்ல. அது மிகப் பரந்த ஒன்று. வாழ்க்கையிலே எவ்வளவு பாதாளத்தில் கிடப்பவனுக்கும்....அவனுடைய வாழ்விலே ஒரு பொருள் இருக்கிறது. அர்த்தம் இருக்கிறது. அது எவ்வளவு துன்பம் நிறைந்ததாக இருந்தாலும் அதை வேறெதற்கும் மாற்றாக அவன் கொடுக்கமாட்டான். எவ்வளவு செல்வம் அவன் காலடியிலே குவிக்கப்படுவதானாலும் அதற்கு மாற்றாக அவன் தன் வாழ்வை இழக்கச் சம்மதிக்க மாட்டான். இன்பமும் துன்பமும் செல்வமும் வறுமையும் எல்லாம் வாழ்வு உள்ளவரை தானே....?

நான் சாவதற்கு இருந்தேன். இப்பொழுது வாழ்வதற்கு முயல்கிறேன். வாழவேண்டும் என்ற ஆசை வந்தவுடனே நான் எவ்வளவு வேகமாக மாறிவிட்டேன் முதலாவதாக என் தந்தைக்குக் கடிதம் எழுதினேன்

எத்தனை நாட்களாகியும் அதற்குப் பதில் கிடைக்க வில்லை. அத்தான் அடிக்கடி கடிதம் எழுதுவதாக எழுதியிருந்தார். ஆனல்...

நம்பிக்கை என்ற கயிற்றைப் பிடித்துக் கொண்டு நான் எனக்கு ஒழிவு கிடைத்த போதெல்லாம் எங்கள் பழய வீட்டை நாடிப்போய்க் கொண்டிருந்தேன். தெரிந்த மனிதர்கள் யாராவது பார்த்து விடக்கூடாதே என்ற பயம். அஞ்சி அஞ்சி...மறைந்து மறைந்து நான் அந்த வீடு இருந்த பக்கம் சென்றேன். முதலில் அது பூட்டிக் கிடந்தது. ஒரு நாள் தபால்காரன் வரு கிற சமயம் காத்துக்கொண்டிருந்து, அவனைத் தூரத் தில் சந்தித்து என் பெயருக்குக் கடிதம் ஏதாவது இருக்கிறதா என்று கேட்டேன். அவன் மேலும் கீழும் பார்த்துவிட்டு கடிதங்களைப் புரட்டிப் பார்த்து விட்டு 'இல்லை' என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

பிரிந்த ஆவி தான் விட்டுச்சென்ற கூட்டைச் சுற்றிச் சுற்றி வந்து பார்க்கும் என்று பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அது பொய்யாக இருக் கலாம். ஆனல் பூட்டிக் கிடக்கும் அந்த வீட்டையாரும் இல்லாத வேளைகளில் நான் சுற்றிச் சுற்றி வந்ததும் அடிக்கடி தபால்காரனைத் துரத்திக்கொண்டு போன தும் உண்மை. அந்த வீடு....இளம் தம்பதிகளாய் நாங் கள் இன்ப வாழ்வு புகுந்த வீடு....அன்போடும் ஆதர வோடும் நாங்கள் காதல் வாழ்வு கண்ட வீடு...துன்பம் வந்தபோதும் பொறுமையோடு மனம் ஒன்றி எதிர் காலத்தில் நம்பிக்கைவைத்து ஒன்றுபட்டுப் போராடிக் கொண்டிருந்த வீடு....அதை ஒவ்வொரு சமயம் பார்க் கும் பொழுதும் என் நெஞ்சம் குமுறி எழும். கண் களிலே கண்ணீர் பீறிடும். ஆனல்....

கடைசியாக அந்த வீட்டிற்கு யாரோ குடி வந்து விட்டார்கள். நான் மறைந்து நின்று பார்த்தேன். ஒரு கணவனும் மனைவியும். என் இதயம் விம்மி எழுந்தது. கடவுளே அவர்களாவது இன்பமாக இருக்கட்டும். அவர்கள் வாழ்வில் துன்பச்சூறுவளிகளைப் புகுத்தாதே. வறுமைப் புயல்களை ஏவி விடாதே. மனிதர்கள் யாருக்குமே துன்பம் வரக்கூடாது. வாழ்க்கை வளமானதாக இருக்கவேண்டும். இன்பம் நிறைந்ததாக இருக்கவேண்டும். அதுதான் என் ஆசை. அதைத்தான் நான் மனப்பூர்வமாக விரும்புகிறேன் என்று சொல்லிக்கொண்டேன்.

எந்த சமயத்திலும் நான் என் குழந்தையைவிட்டு ஒருகணமும் பிரிந்தவள் அல்ல. ஒரு நாள் இரவு பதினெரு மணி இருக்கும். நான் அந்த வீட்டுக் கதவைத் தட்டினேன். "யார்...?" என்று அதட்டும் குரலில் அந்த வாலிபன் கேட்டான். "ஐயா உங்களைக் கொஞ்சம் பார்க்கவேண்டும், நான் ஒரு ஏழைப் பெண்" என்று கூறினேன். கதவு கொஞ்சம் திறக்கப்பட்டது. அந்த வாலிபன் முன்னுல் வந்தான். அவன் பின்னுல் நின்று அந்த அழகிய பெண் எட்டிப் பார்த்தாள். அந்த வேளையில் நான், ஒரு குழந்தையும் தாயும் அங்கு வந்தது பற்றி அவர்கள் என்ன நினைத்தார்களோ....அவன் கோபத்துடன் ஏதோ பேச ஆரம்பிக்கும் முன்பே, "ஐயா எனக்கொன்றும் வேண்டாம். கமலம் என்ற விலாசத்திற்கு இந்தவீட்டிற்கு ஏதாவது கடிதம் வந்தால்....அல்லது யாராவது இங்கு வந்து அந்தப் பெயர் உள்ளவளைப் பற்றி விசாரித்தால்....அவள் உயிருடன் இருக்கிறுள். அடிக்கடி இந்தப் பக்கம் வருகிறுள். அவளைப் பார்க்க முடியும் என்று மட்டும்

சொல்லிவிடுங்கள். அதுமட்டும் போதும். நான் உங்களை வேறு விதத்தில் தொந்தரவு செய்யமாட்டேன்.... என்று சொல்லிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் ஓடிவிட்டேன். அதன் பிறகு இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு தடவை அவர்கள் கண்ணில் படும்படிப் போவது என் வழக்கமாயிருந்தது.

என் உடல் ரொம்பவும் இளைத்துப் போயிற்று. நான் உருக்குலைந்து போனேன். முன்பு பார்த்தவர்கள் இப்போது என்னை அடையாளமே கண்டுகொள்ள முடியாது. என் உடல் நாளுக்கு நாள் பலஹீனமானதோடு நாளாக நாளாக எனக்கு எப்படியோ இருந்தது. நான் உற்சாக மிழந்தவளாக மட்டும் இருக்கவில்லை. உள்ளூற ஏதோ நோயில் பீடிக்கப் பட்டவள் போல் உணர ஆரம்பித்தேன். இரண்டு மூன்று நாட்களாக வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. கையிலே காசும் இல்லை. அரைப்படி கால்படி கடன் வாங்கிக் கஞ்சி வைத்துக் குடித்தேன். இனி அதுவும் யாரிடம் போய்க் கேட்பது என்று தெரியவில்லை. மற்ற பெண்கள் எங்கோ தூரத்தில் சுண்ணும்புக் காளவாய்க்கு வேலைக்குப் போனார்கள். வேறு வழியின்றி நானும் குழந்தையை எடுத்துக்கொண்டு அவர்களோடு சென்றேன். மாலைவரை வேலை செய்துவிட்டு வீட்டை நோக்கித் திரும்பினேன். உடல் குளிர்வது போல் இருந்தது. நடக்க முடியவில்லை. தட்டுத் தடுமாறி நான் எப்படி நடந்து கொண்டிருந்தேன் என்பது எனக்கே புரியவில்லை. என் குழந்தை நான் தூக்க முடியாதபடி கனமாகி விட்டதுபோல் தோன்றிற்று. தலை சுற்றுவது போல் இருந்தது.

கண்கள்சுழன்று கொண்டுவந்தன. என்வாழ்க்கை அஸ்தமித்துக் கொண்டிருக்கிறது. இனிச்சற்று நேரத்தில் நான் உறங்கி விடுவேன். பிறகு எழுந்திருக்கவே மாட்டேன். மீளா உறக்கத்தில் ஆழ்ந்து விடுவேன் என்று நினைத்தேன். அந்த நிலையிலும் என் மனதில் அந்த ஆசை தோன்றிற்று. அதுதான் என் வாழ் நாளில் கடைசி ஆசை என்று நினைத்தேன். அதை நிறைவேற்றிக் கொள்ளாமல் நகரக்கூடாது என்றும் நினைத்துக்கொண்டேன். அதனல்....நான் மீண்டும் நடந்து கொண்டிருந்தேன். எங்கள் பழய வீட்டை நோக்கி.

சற்று தூரத்தில் நின்று ஏக்கத்துடன் அந்த வீட்டைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்றேன். என் கண்களில் அருவிபோல் கண்ணீர் பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது. அந்தப்பெண் என்னைப்பார்த்தாள் ஒன்றும் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து அந்த வாலிபனும் எங்கோ இருந்து வந்தான். என்னைப் பார்த்தான். ஒன்றும் பேசாமல் உள்ளே போய் விட்டான். அதனல் என்னைத்தேடிக் கொண்டு ஒருவரும் வரவில்லை. அப்பாவும் வரவில்லை ....அத்தானும் வரவில்லை...எனவே நான் இன்னும் அனுதை யாகத்தான் இருக்கிறேன். இப்பொழுது செத்தாலும் யாருமற்றவளாக அனுதையாகவே சாவேன். என்னையாராவது அயலார் எடுத்துப் புதைத்து விடுவர். என் கண்மணி யாரோ இரக்கமுடையவர்களால் வளர்க்கப்படும். அல்லது பிச்சை எடுத்துத்திரியும். கண்ணீர் வடித்துக்கொண்டே நான் மீண்டும். நடந்தேன். சிறிது தூரம் சென்றதும் நடக்க முடியாமல் ஒரு திண்ணைமேல்—சாய்ந்து விட்

டேன். கண்களை மூடிக்கொண்டே அப்படியே நெடு நேரம் உட்கார்ந்திருந்தேன்.

நேரம் போனதே தெரியவில்லை. என் கண்மணி பசியால் அழுத குரல் கேட்டுக் கண் விழித்தேன். என் உடல் அனலாய்க் கொதித்துக் கொண்டிருந்தது. இனி ஒரு அடிகூட நடக்கமுடியாதுபோல் தோன் றிற்று, குழந்தை அழுகிறது. எங்காவது அதற்கு ஒரு வாய்ச்சோறு வாங்கிக்கொடுக்க வேண்டும். ஆமாம் நான் இப்பொழுது பிச்சைக்காரியாகப் போகிறேன். நான் எழுந்திருந்தேன். கண்ணீர் குமுறிக்கொண்டு வந்தது,

யாரிடம்போய் எப்படிக்கேட்டது என்று தெரி யாமலே இரண்டு மூன்று வீதிகளைச் சுற்றிச்சுற்றி வந்தேன். குழந்தை அழுதுகொண்டே இருந்தது. கடைசியாக ஒரு வீட்டின் முன்னல் விளக்கு எரிந்து கொண்டிருந்ததால் துணிவடைந்து.... "அம்மா.... அம்மா...இந்தக் குழந்தைக்குக் கொஞ்சம் சோறு கொடுங்கள் அம்மா...." என்று கேட்டேன். உள்ளே பேச்சுக்குரல் கேட்டது, ஒரு பெண் சாதம் எடுத்துக் கொண்டு வந்தாள். நான் எதில் வாங்குவது என்று தெரியாமல் விழித்தேன். இந்த விசித்திரமான பிச்சைக்காரியை அவள் ஏறிட்டுப்பார்த்தாள். அவள் கையிலிருந்த தட்டம் கீழே விழுந்தது...."அக்கா" என்று அவள் கூவிவிட்டாள். அவள் என் தங்கை விமலா. உள்ளே இருந்து என் அப்பா ஓடி வந்தார். என்னைப் பார்த்ததும் கமலா கமலா....என்று கூவி விட்டார். நான் உணர்விழந்து விழுந்து கொண் டிருந்தேன்.

* * *

14 ரகு.

நான் வாழ்வைப்பற்றியே சிந்தித்தவன். இப்பொழுது சாவின் இடையே நடமாடுகிறேன். எவ்வளவு பயங்கரமான உண்மை இது...! தூரத்திலே குண்டுகள் வெடித்துக் கொண்டிருக்கின்றன. அங்கே போர் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. களத்திலே கடினமான உழைப்பின் பின் கண்ணுறங்க வந்தவன் சிந்தனையிலே மூழ்கிக் கிடக்கிறேன். என்னுல் தூங்க முடியவில்லை. என் இதயத்திலே வெடிக்கும் சிந்தனை குண்டுகளின் பேயிரைச்சல் பீரங்கிகளின் முழக்கத்தை விட அதிகமாக இருக்கிறது. என்னைச் சுற்றிலும் சாவு பயங்கரமாகப் பேய் நடனம் ஆடிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான இளைஞர்கள்....தங்கள் ஆருயிர்களை இழக்கிருர்கள். அவர்கள் உடல்களைக் குண்டுகள் துளைத்துச் செல்கின்றன. கைகால் போயும் தலை உடல் சின்னு பின்னமாகியும் இறப்போர் பலர். மரணத்தின் ஓலம் தான் இங்கே சதா கேட்டுக் கொண்டிருக்கிறது. அடிபட்டவர்களின் முனகல் தான் அதன் பின்னணி. ஆம்....நானும்கூட இன்றே நாளையோ சாக நேரிடலாம். சாவு அவ்வளவு சர்வ சாதாரண மானதாகத்தான் இருக்கிறது! இங்கே ....ஆனுல்....இன்னும் கூட நான் வாழ்வைப்பற்றித் தான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்.

சின்னக் குருவிகள் சேர்ந்து கட்டிய சிங்காரக் கூட்டைச் சின்னப் புத்திச் சிறு குரங்கொன்று பிய்த்தெறிந்ததுபோல் எங்கள் குடும்பம் வறுமையில் சின்ன பின்னமாகிக் கிடக்கிறது. நான் என் துயரத்தை எந்த வார்த்தைகளால் கூறுவேன்? என் உணர்ச்சிகளை எப்படித்தான் சொல்வேன்?

மனைவி குழந்தையை விட்டு நான் ஓடிவந்தேன். நளனுடைய கதை நினைவுக்கு வருகிறது. நள்ளிரவில் நடுக்காட்டில் தூங்குகின்ற தன் மனைவியின் துணியிலே பாதியைக் கிழித்தெடுத்து உடுத்துக் கொண்டு அவளை அங்கேயே விட்டு விட்டு தான்மட்டும் எழுந்து சென்றானும் அவன்....! அவனுடைய இதயம் எவ்வளவு கொடியதாக இருக்க வேண்டும் என்று நினைப்பேன் நான். ஆனால்....எனக்கு அதே போன்ற தலையிலெழுத்து வரும் என்று நான் கனவிலாவது நினைத்திருப்பேனா ? அவளுடைய தந்தையிடமாவது சேர்த்து விட்டு வந்திருக்கலாகாதா என்ற நினைவு பங்களூர் வந்து சேர்ந்த பின்தான் வந்தது. உடனே அவருக்குக் கடிதம் எழுதினேன். ஒரு மாதம் கழித்துக் கடிதம் விலாசதார் கிடைக்கவில்லை என்று திரும்பி வந்து சேர்ந்தது. அவர்களும் நம்மைப் போல்தான் எங்காவது ஓடிப்போயிருப்பார்களா ? அப்படி ஓடும் நிலை வந்திருந்தாலும் அவர் என்னைப் போல் விமலாவை விட்டு விட்டு ஓடவில்லை. தந்தையின் பாசம் கணவனுடையதைவிட அதிகமானதா ? ஐயோ கமலா.... நீ ஒருவேளை பட்டினி கிடப்பதைக்கூடப் பார்க்கச் சகிக்காமல் அல்லவா நான் ஓடிவந்தேன்.

கமலாவுக்குக் கடிதங்கள் எழுதினேன். ஒன்றல்ல இரண்டல்ல. எத்தனை எத்தனையோ...? நான் கடிதங்களா எழுதினேன் ? என் கண்ணீரையும் இரத்தத்தையும் கலந்து உணர்ச்சிகளின் சித்திரங்கள் அல்லவா வரைந்தனுப்பினேன். முதல் இரண்டு மூன்று கடிதங்கள் போன இடம் தெரியவில்லை. மற்ற கடிதங்கள் திரும்பி வந்து விட்டன.

வீட்டுக்காரருக்கு கடிதம் எழுதினேன். கமலாவை அவள் தந்தை வந்து அழைத்துக் கொண்டுபோய் விட்டதாகவும் வாடகைப் பாக்கியை அனுப்பும்படியும் பதில் வந்தது. நான் வாடகைப் பணத்தை அனுப்பி விட்டேன். ஆனல் அவர் எழுதின பதிலை என்னல் நம்ப முடியவில்லை. பாங்கில் வேலைசெய்து கொண் டிருந்த என் நண்பன் ஒருவனுக்குக் கடிதம் எழுதி னேன். எப்படியாவது என் மனைவி என்ன ஆனள் என்பதை விசாரித்து எழுதும்படி மன்ருடிக் கேட்டுக் கொண்டிருந்தேன். பதினைந்து நாள் கழித்து பதில் வந்தது என்மனைவியைப்பற்றி ஒரு தகவலும் கிடைக்க வில்லை என்றும், அவளுடைய தந்தையும் தங்கையும் கூட வந்து தேடிவிட்டுப் போனர்கள் என்றும் அதில் இருந்தது. ஐயோ என் மனைவி என்ன ஆனள்? குழந்தை என்ன ஆயிற்று....? நான் பாதகன். மகா பாபி....அவர்களை யாரும் அறியாத ஊரில் தன்னந் தனியே விட்டு விட்டு ஓடி வந்தேனே...?

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும்நரகத்தில் அழுந்துவதைப்போல் அழுந்திக் கொண்டிருக்கிறேன் நான். சிந்தனைகள் என் இதயத்தைக் கூறு கூருகத் துளைக்கின்றன. ஆனல் நான் என்ன செய்வேன். எனக்கு விடுமுறை கிடையாது. இங்கிருந்து தப்பி ஓடவும் முடியாது. ஐயோ நான் மீண்டும் என் மனைவி குழந்தையைப் பார்ப்பேன....?

அபாய அறிவிப்புச் சங்குகள் ஊதுகின்றன. விமானங்கள் புற்றீசல்கள்போல் மேலேசுழல்கின்றன. அதோ குண்டுகள் விழுகின்றன. அவற்றிற்கு எத் தனையோ பேர் பலியாகலாம். என்னல் பாதுகாப்

பீடத்திற்குப் போய்ச்சேர முடியவில்லை....ஹா....
ஐயோ கமலா.......?

* * *

## 15. பாலு.

நான் சென்னையில் மாணிக்க முதலியாரைச் சந்திக்க முடியும் என்று நினைக்கவே இல்லை. மனிதன் என்னடா என்றால் கார்கீர்வைத்துக்கொண்டு தட புடலாக இருக்கிறான், நான் என்ன நினைத்தேன், "ஆள் அட்ரெஸ் இல்லாமல் போய் விட்டான். பெண்ணுக்குப் பாடத் தெரியும். எங்காவது தெருவிலே பாட விட்டுப் பிச்சை எடுத்துக்கொண்டு ஊர் ஊராகப் போகக் கிளம்பியிருப்பான் என்று ராமகிருஷ்ண பிள்ளை அதை நினைத்துச் சிரித்துக் கொண்டிருக்கிறார். ஆனால் இங்கே.......?

நடேச முதலியாரும் 'அவரும்' பஸோட்டா முன்னால் வந்திறங்கியதும் என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. மனிதன் உலகத்தை என்னவோ பண்ணிவிட்டான் போலிருக்கிறதே. இந்த ஆளிடம் உலகம் இப்படி வாலைக் குழைக்கவாவது என்று நினைத்தேன். உள்ளே இருந்து விமலாவும் சபேசனும் இறங்கியதைப் பார்த்தவுடன் தான் எனக்கு விஷயம் வெளிச்சமாயிற்று. ஓ....உலகம் இப்படி பெண்ணைக் கண்டா மயங்கிக் கொண்டிருக்கிறது, சபாஷ்.......மாணிக்க முதலியார் உலகத்தைப் புரிந்துகொள்ள ஆரம்பித்துவிட்டார் என்று நினைத்தேன்.

நடேச முதலியார் பெரிய ஆள். அவரைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவரை அறிமுகம் செய்து கொள்ளும் வாய்ப்புக் கிடைக்கவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது என்று நினைத்துக் கொண்டேன்.

மாணிக்க முதலியார் பாலுவைக் கண்டதும் ஆனந்தத்தில் அப்படியே கட்டித்தழுவிக் கொண்டார். இது தானே நம்முடைய மகிமை! எனக்கு நானே சொல்லிக் கொள்கிறேன். "பாலு கெட்டிக் காரப் பயலடா நீ.... பார் நீ யாரைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி நாசப்படுத்தி விட்டாயோ அந்த மனிதன் உன்னை உயிரன்பன் என்று நினைத்துக் கட்டித் தழுவிக்கொள்கிருன். பாலு....உலகம் உன்னை ஒன்றும் செய்து விட முடியாது அது உன் காலடியில். கிடக்கிறது." என்று. முதலியாரிடம் சேமசமாச்சாரங்கள் விசாரித்தேன். விமலாவும் கமலாவும் கச்சேரிகள் செய்வதாகவும் 'ப்ளே பேக்'பாடுவதாகவும் நல்ல வருமானம். கிடைக்கிறதென்றும் கூறினர். ரகுவைப் பற்றி விசாரித்தேன். பாவம் அவன்தான் பட்டாளத்திற்குப்போய் விட்டோன். இப்பொழுதுதான் விலாசம் கிடைத்தது கடிதம் எழுதியிருக்கிறேன் என்ருர். நான் உள்ளூறச் சிரித்துக்கொண்டு ரொம்ப வருத்தம் அடைந்து விட்டதாக நடித்தேன்.

மாணிக்க முதலியாரிடம் இவ்வளவு அன்யோன்யமாகப் பழகுவது கண்டு நடேச முதலியார் என்னைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தார். மறுபடியும் பாலுவின் திறமை என் மனக்கண்முன் படமெடுத்தாடிற்று. என்ன சாமர்த்தியம். எந்த மனிதனுடைய நட்பை எவ்வளவு ஆயிரம் கொடுத்தாலும் சம்பாதிக்க முடியாது என்று நினைத்துக் கொண்டிருந்தேனே அந்த மனிதன் என்னைத்தேடி ஓடி வருகிருன். என்னுடைய

நட்பைத் தானகப்பெற முயல்கிருன். பாலு நீ பெரிய மனிதனுடா என்று மனதிற்குள்ளேயே சொல்லிக் கொண்டு, நடேச முதலியாரிடம் அப்படியே உள்ளம் உருகிவிடுகிற மாதிரி நாலு வார்த்தைகள் பேசி வைத்தேன். "உங்களைப்பற்றி ரொம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகா நீங்கள் எப்படிப்பட்ட பெரிய மனிதர் உங்கள் நட்பைப்பெற நேர்ந்த இந்தப்பொன்ஞன சமயத்தை என் வாழ்க்கைப் பேரேட்டிலிருந்து என்றென்றும் அழிக்க முடியாது..." என்று கூறி விட்டால்....என்ன அருமையான பேச்சுத்திறமை....! புகழ் மொழிகளில் மயங்காத பெரிய மனிதன் இருக்கிருஞ? புகழுக்கு ஆசைப்படுகிறவன் தானே பெரிய மனிதன் ஆகிருன்? நடேச முதலியார் இப்பொழுது என் நண்பராகி விட்டார். நாளைக்குப் பாங்க் ஏஜெண்ட் சந்திரசேகரிடம் 'நடேச முதலியாரை எனக்கு ரொம்ப நாளாய்த்தெரியும் அவர் என் நண்பர்' என்று தைரியமாகக் கூறலாம். அவர் பொருமைப் படுவார். அப்படியே மெள்ள நம்ம பாங்கில் இணைத்து விடுங்கள்! என்று கெஞ்சுவார் என்று நினைத்துக் கொண்டேன். இரண்டு நாட்களுக்குப் பின்னல் நடேச முதலியார் தலைமையில் ஒரு உதவிக் கச்சேரி நடப்பதாகவும் அதில் நானும் கலந்து கொள்ளவேண்டும். என்றும் கேட்டுக்கொண்டனர். எனக்கு ரொம்ப வேலையிருப்பதாகவும் இருந்த போதிலும் கமலா விமலா பாட்டைக்கேட்டு ரொம்ப நாட்களாகி விட்டதாகவும் அதனல் கண்டிப்பாகக் கலந்து கொள்வதாகவும் கூறி விடைபெற்றுக் கொண்டேன்.

நம்முடைய நிலைமை நாளுக்கு நாள் பக்குவமடைந்துகொண்டு வருகிறது. நம் ஆசைக்கனவுகள் எல்லாம் அருமை நினைவுகள் ஆகப்போகின்றன. கொஞ்ச நாளிலே பாலு ஒரு அமெரிக்கனுகி விடுவார். நியூயார்க் வீதிகளிலே ராஜநடை போடுவதுபோல் கனவு கண்டு கொண்டே சந்திரசேகரிடம் வந்து சேர்ந்தேன். சந்திரசேகர் நடேச முதலியார் சமாச்சாரத்தைக் கேள்விப்பட்டதும் வாயைப் பிளக்கிருன். என்க்குத் தெரியாதா ஆள் எப்படிப்பட்டவன் என்று. உம் கிடக்கிருன் கழுதை....விடுங்கள். கச்சேரிக்குத் தன்னையும் அழைத்துக் கொண்டுபோக வேண்டும். என்பது அவன் வேண்டுகோள். அது நமக்கும் கொஞ்சம் லாபம் தானே! இவர் பெரிய பாங்க் ஏஜெண்ட் நம்ம நண்பர் என்று பிரமாதமாகச் சொல்லிக்கொள்ளலாம் அல்லவா என்று நினைத்துக் கொண்டேன்.

பாலுவின் கணக்கு எப்பொழுதுமே தப்பாகப் போனதில்லை. அந்தக் கணக்கை முடித்துக்கொள்ள வேண்டிய சந்தர்ப்பமும் வந்து கொண்டிருக்கிறது. இனி இந்த நாட்டில் தங்குவதெல்லாம் நாட்கணக்கில் தான் இருக்கிறது. திருட்டுச் சொத்தெல்லாம் பணமாகிவிட்டது. இன்னும் கொஞ்சம் வேலைகள் பாக்கி. அதுவும் முடிந்துவிடும். முதலில் சிலோனுக்குப் போகப் பாஸ்போர்ட்டும் வாங்கித்தயாராக வைத்திருக்கிறேன். எங்கேயோ போய் விட்டேனே....? கச்சேரி ஹாலில் நுழைந்ததும் எனக்குப் பிரமாதமான வரவேற்பு. நடேச முதலியார் தலைமை தாங்குகிருர். நான் அவருக்குப் மக்கத்தில் உட்கார்ந்திருக்கிறேன். சந்திரசேகர் முதல் வரிசையில் உட்கார்ந்திருக்கிருர்.

பெண்கள் நன்றாகத்தான் பாடுகிறார்கள். அவர்களுடைய சங்கீத ஞானம் ரொம்ப முன்னேறியிருக்கிறது எல்லோரும் கைதட்டுகிறார்கள். நான் மாணிக்க முதலியாரிடம் பேசிக்கொண்டிருந்தேன். சந்திரசேகர் மெதுவாக என் கையைப்பிடித்து அழுத்தி வெளியே போகவேண்டும் என்பதுபோல் ஜாடை செய்தார்.

நாங்கள் வெளியே வந்தோம். சேகர் மெல்லிய குரலில். "பெண்கள் எப்படி" என்று கேட்கிறார். எனக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை ஆனால் புரிந்துகொண்டதும் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்து விட்டேன். மனிதன் பாவம் ரொம்ப நாளாகப் பெண்ணின்பம் என்றால் என்னவென்ற தெரியாமல் காய்ந்து கிடக்கிறான். பாவம் அவனுக்கு இப்படிப்பட்ட விஷயங்களைக் கவனிக்க ஓய்வே கிடைத்திராது. கச்சேரி, சினிமா, நாடகம் இதிலெல்லாம் அவனுக்கு அக்கரையே கிடையாது இப்பொழுது முதலாவதாகச் சந்தர்ப்பம் கிடைத்ததும்...............

சினிமா நாட்டகக்காரிகள், பாடகிகள் இவர்கள் எல்லோரும் ஒழுக்கம் கெட்டவர்கள். காசை வீசி எறிந்தால் அவர்களில் யாரை வேண்டுமானாலும் வாடகைக்குப் பிடித்துக் கொள்ளலாம்,' என்று கேள்விப்பட்டிருப்பான். இந்த அழகிகளைப் பார்த்ததும் அவனுக்குச் சபலம் தட்டுகிறது. என்னை உதவிக்கு அழைக்கிறான். நான் சிரித்துக் கொண்டிருந்த போதிலும் என் சிந்தை வேலை செய்து கொண்டிருந்தது. நம் திட்டத்திற்கு இது இன்னொரு படி முன்னேற்றம் சந்திர சேகரைப் பூராவும் மயக்கி நம் கைக்குள் போட்டுக்கொண்டால் நாம் என்ன செய்கிறோம் என்பதையே அவன் கவனிக்க மாட்டான் என்று

நினைத்துக்கொண்டேன். நம்ம புத்திதான் எப்பொழுதும் வாளின் முனைபோல் கூர்மையாக இருக்கிறதே. எப்பொழுது என்ன நடந்தாலும் அதைத் தனக்குச் சாதகமாக மாற்றிக்கொள்ளும் திறமை பாலுவுக்கிருப்பதுபோல் வேறு யாருக்குமே இருக்காது. உடனே போட்டேன் ஒரு போடு, "மிஸ்டர் சேகர் ஒன்றுக்கும் கவலைப் பட வேண்டாம். இதுகள் என்ன அடிப் பட்ட கட்டைகள்தானே" இப்பொழுது பார்க்கிறீர்களா ....இந்த பாலு மேடைக்குப் போனால் அதுகள் என்ன தளுக்கு தளுக்கு மினுக்கிக் குலுக்குகின்றன என்று.... உங்களுக்கு நாளைக்கு ஏற்பாடு செய்கிறேன். கமலா போதும் அல்லவா....பெரியவள்பெயர் கமலா....என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றேன்.

கமலா பாடிக் கொண்டிருக்கிறாள். நான் சென்று பின்னால் உட்கார்ந்தேன். உற்சாகமாகப் பாடிக் கொண்டிருந்த சமயத்தில் அவள் மேலாக்கு நழுவிக் கீழே விழுகிறது. நான் அதை எடுத்து மேலே போடுகிறேன். அவள் என்னைப் பார்க்கிறாள். வெட்கத்துடன் புன்னகை புரிகிறாள். பாட்டின் உற்சாகத்திலே கை தட்டிக் கொண்டிருக்கும் சபையோர் இதை எங்கே கவனிக்கப் போகின்றனர். நான் முன்வரிசையில் பார்க்கிறேன். சந்திரசேகரின கண்கள் பொறாமையுடன் பார்த்துக் கொண்டிருக்கின்றன. பாவம், இந்த அழகிகளை அப்படியே வாரி விழுங்கிடத் துடிக்கின்றன. அவர்களுடைய கண்களோடு உறவாட விரும்புகின்றன. அந்த இன்பமெல்லாம் சும்மா கிடைத்து விடுமா ஐயா...! தொட்டு தாலி கட்டிய கணவன் கூட பிறர் முன்னிலையில் தன் மனைவியின் மேலாக்கைத் தொடத்தயங்குவான். நான் கமலாவின்

மேலாக்கை எடுத்துப் போடுகிறேன். அவள் வித்தியாசமாக நினைக்துக் கொள்வதில்லை. இந்த நம்பிக்கை சும்மா ஏற்பட்டு விடுமா....? எல்லோருக்கும நல்லவன் பாலுவுக்குத் தவிர வேறு யாருக்குமே இப்படிப்பட்ட துணிச்சல் வராது. நான் தான் அவர்களிடம் பெற்ற தந்தையும் உடன் பிறந்த சகோதரனும் போல் பழகிக் கொண்டிருக்கிறேனே....? சந்திரசேகர் நினைத்துக் கொண்டிருப்பான். இந்தப் பெண்களின் அந்தப் புறக்காதலர்களிலே நானும்ஒருவன் என்று. அவனும் ஒருவன் ஆகவேண்டும் என்பதுதானே அவன் ஆசை!

கச்சேரி முடிந்தது. சந்திரசேகரை வீட்டுக்கு அனுப்பி விட்டு நான் காரில் இவர்களோடு புறப்பட்டு விட்டேன். மாணிக்க முதலியார் மகன் சபேசன்... இந்தப்பயல் எப்பொழுதுமே விமலாவுக்குப் பக்கத்தில் உட்கார வேண்டும் என்று ஆசைப்படுகிறான். அவர்கள் பெரிய காதலர்களாகி விட்டார்கள். கல்யாணமும் நடக்கப் போகிறது. வீட்டில் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தோம். கமலாவின் குழந்தை நடக்க ஆரம்பிக்கிறது. குழந்தை கொழு கொழுவென்று அழகாக இருக்கிறது. கொஞ்சநேரம் அவர்கள் பாட்டுத் திறமையைப் புகழ்ந்து கொண்டிருந்து விட்டு. குழந்தையிடம் கொஞ்சம் விளையாடிவிட்டு நான் புறப்பட்டேன். நடேச முதலியாரும் புறப்பட்டார். அவருடைய நட்பையும் உறுதிசெய்து கொள்ளவேண்டும் என்று நினைத்துக் கொண்டு, "வீட்டிற்குத்தானே போகிறீர்கள். நானும் அந்தப் பக்கமாகத்தான்போக வேண்டும்." என்றேன். "வாருங்களேன் காரிலேயே போய்விடலாம்," என்றார் முதலியார். நாங்கள் மூன்று பேரும். நானும், நடேச முதலியாரும், சபேசனும்

புறப்பட்டோம். பங்களாவிற்குச் சென்றதும், ஏன் உள்ளே வாங்களேன், கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருக்கலாம்," என்ருர். இந்த மாதிரி சமயங்களை பாலு நழுவ விடுவாரா? உடனே உள்ளே போனேன்.

நாங்கள் ஹாலில் உட்கார்ந்தோம். சபேசன் தனக்குத் தூக்கம் வருகிறதென்று கூறி உள்ளே போய் விட்டான். நடேச முதலியார் என்னை அந்தரங்கமாகக் கேட்டார். நம்ம பையனுக்கு அந்தச் சின்னப் பெண்ணை முடித்து வைததுவிடலாம் என்று யோசனை. உங்கள் அபிப்பிராயம் எப்படி என்று....?" நான் திகைத்துப் போய்விட்டேன். இதைப்போன்ற விஷயத்தில் அவர் என் அபிப்பிராயம் கேட்பார் என்று நான் நினைக்கவேயில்லை. நான் சிரித்துக்கொண்டே "அதற்கென்ன? செய்யலாங்க....செய்யாமே என்ன" என்று மழுப்பினேன். ஆனல் நம்ம தலைக்குள்ளே மூளை சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தது. இந்த மனிதனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகி விட்டால்.......?

நடேச முதலியார் தொடர்ந்து கூறினர், "இல்லை உங்களிடம் எதற்காகக்கேட்கிறேன் என்ருல் நீங்களும் அவரும் ஒரே ஊர்க்காரர்கள் ரொம்ப நாளாகப் பழக்கம் என்று சொன்னீர்களா....அதனுல்தான்...அவர் பாவம் ரொம்பக் கஷ்டதசையில் இருக்கிருர். ஆனல் பெண்...அவளுக்கு அபாரமான திறமை இருக்கிறது....

"ஆமாங்க ஆமாங்க....அதிலொண்ணும் குறைச்சல் இல்லே....உங்களுக்கெல்லாப் திருப்தியாஞ தாராளமாகச் செய்யலாம். நான் என்ன சொல்லப் போறேன் ஆனு.......

"சொல்லுங்க. சும்மா சொல்லுங்க. நமக்குள்ளே பேசிக்கக் கூடாதா என்ன? நான் எப்பவுமே எப்படின்னு நம்ம அபிப்பிராயம் எப்படி இருந்த போதிலும் நாலு பேரைக் கேட்டுத்தான் எதையும் முடிவு செய்வேன். ஆத்திரப் பட்டு எதையும் செஞ்சுடமாட்டேன். உங்கள் அபிப்பிராயம் எப்படி...?

"அடே அப்பா....என் அபிப்பிராயத்தைக் கேக்கிறீங்களே....? உங்கள் அனுபவத்துக்கும் அறிவுக்கும் எது பொருத்தமாத் தெரியறதோ அதைச்செய்யுங்க.... ஆனா அந்த மூத்த பொண்ணு பாருங்கோ....பாவம்...."

"என்னங்க....அந்த சமாச்சாரத்தைத்தான் உங்ககிட்டக் கேக்கணும்னு நெனைச்சேன். சும்மா சொல்லுங்க....

"உம்....அதன் தலையெழுத்து அப்படி....அதற்கு நாம் என்ன செய்யலாம், என்னவோ அப்படி எல்லாம் நடந்துட்டுது...

"எப்படி நடந்தது....?

"உம் அதை ஏன் கேக்கறீங்க........அந்தப் பொண்ணு....யாரோ ஒருத்தனைக் கூட்டிட்டு ஓடிப் போயிட்டுது....அவன் பட்டணத்திலே கொண்டாந்து இதை விட்டுவிட்டு எங்கேயோ கம்பி நீட்டிட்டான்.

"என்ன....?

"உம்...அதனாலே என்னங்க....மூத்த பெண்ணை நினைச்சு இளைய பெண்ணோட வாழ்க்கையைக் கெடுத்துடலாம்களா....இந்தக் காலத்திலே அதை எல்லாம் யார் பார்க்கறாங்க....

நடேச முதலியார் முகம் கறுத்துப்போய்விட்டது. அவர் எழுந்திருந்து ஹாலில் குறுக்கும் நெடுக்குமாக

நடக்க ஆரம்பித்துவிட்டார். எனக்கோ உள்ளூற ஒரே குஷி...நம்ம மருந்து எங்கேயுமே பலிக்காமல் போனதில்லை என்று நினைத்துக் கொண்டேன்.

கொஞ்சநேரம் அப்படியே மௌனம் நிலவியது. கடிகாரம் மூன்றடித்தது. நான் மெதுவாக எழுந்திருந்து "நான் வரட்டுமா....இரவு ரொம்ப நேரமாகிவிட்டது," என்றேன். அவர் சடக்கென்று திரும்பி என் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு....'பானு ....நான் உங்களுக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன் என் கண்களைச் சரியான சமயத்தில் திறந்து வைத்தீர்' என்றார். அந்தச் சமயத்தில் மௌனமாக விடைபெற்றுக் கொள்வதுதான் சிறந்தது என்று நினைத்து விடைபெற்றுக் கொண்டேன்.

* * *

## 16. ரகு

என் காதுகளை என்னால் நம்பமுடியவில்லை....கண்களையுமா நம்பாமல் இருக்கட்டும். ஐயோ....என் நினைவு தடுமாறுகிறதே....! நான் ஏன்தான் அந்தக் குண்டு வீச்சிலிருந்து உயிர் பிழைத்தேன்.

என் மார்பையும் இடது கையையும் துளைத்துச் சென்ற கண்ணாடிச் சில்லுகள் என் உயிரை ஏன் எடுத்துச் செல்லவில்லை? இந்த நரக வேதனைப்படவா நான் உயிருடன் திரும்பி வந்தேன் ?

என் ஒரு கை போயிற்று. மார்புக் கூடு நொருங்கிற்று. எந்த வேலைக்கும் லாயக்கற்றவனாக நான் ஏன் உயிருடன் திரும்பி வந்தேன் ? ஆனால்......

பிழைத்து விடுவேன் என்றறிந்ததும் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தேன் ? இன்று....?

குண்டடி பட்டுக் கீழே விழுந்தபோது என் நினைவி லெழுந்து நிழலாடிய உருவம் கமலாவினுடையது....! நான் மீண்டும் பிரக்ஞையடைந்து நினைவு பெற்ற போது என் நினைவில் வந்து என்னைத் துன்புறுத்தி யது கமலாவினுடைய உருவம். சகிக்கமுடியாத மரண வேதனையிலே நான் துன்புற்றுத் துடிதுடித்துக் கொண்டிருந்தபோது நான் யாரை நினைத்து மனம் புழுங்கினேனே அந்த ஒரே ஒருத்தி கமலா....? சாவு என்னைப் பார்த்துச் சரஸ நகை புரிந்து கொண்டிருந்த பொழுது நான் யாருக்காக வாழவேண்டும் என்று துடித்தேனு அவள் கமலா....! கமலா, கமலா, கமலா, கமலா...என் கனவும் நினைவும் உடலும் உயிரும் எல் லாம் கமலா கமலாவாக இருந்தாள். ஆனுல்...

ஐயோ என்னுல் நம்ப முடியவில்லையே. காதால் கேட்டது போகட்டும் கண்ணுல் கண்டதுமா பொய்யாக இருக்கும். பாலு அவள் மேலாக்கைப் பிடித்து விளை யாடினுன். அவள் மோகனப் புன்னகை புரிந்தாள். அவள் அவன் கைக்குள் இருப்பதாகக் கூறினுன். வேறொருவனுக்கும் கூட்டிக் கொடுப்பதாகச் சொன் னுன். என் உடல் நடுங்குகிறது. உள்ளம் துடிக்கிறது எனக்கு ஒன்றும் புரியவில்லை....!

கமலா இப்படி மாறியிருப்பாளா? நம்ப முடிய வில்லை. நம்பாமலும் இருக்க முடியவில்லை. காலம் எங்கள் வாழ்வைச் சின்னபின்னமாக்கிச் சீரழித்து விட்டது. அதன் கரங்களிலே நாங்கள் கொடுமை யான துன்பங்கள் அடைந்தோம். அதனுல்...? என் னுல் நினைக்கவே முடியவில்லை. என் தலை சுழல்கிறது.

பாலுவின் பேச்சைக் கேட்டபோது ஆத்திரம் வந் தது. அவன் என் மனைவியின் முன்றானையைக் கை

யால் தொட்டபோது என் உதிரம் கொதித்தது. கோப வெறியிலே என் கண்கள் குருடாயின. அவன் கழுத்தை நெறித்துக் கொல்லவேண்டும் என்று ஆத்திரம் வந்தது. நான் முடவன். ஒரு கையில்லாதவன் என் மார்க்கூடின் ஒரு பகுதி வலிவிழுந்து கிடக்கிறது. நான் இந்த ஊருக்கு ரெக்ரூடிங் சார்ஜெண்டாக உத்தியோகத்தில் வந்திருக்கிறேன். ராணுவ உடைகளில், இந்த நிலையில் என்னை யாருமே அடையாளம் புரிந்துகொண்டிருக்கமாட்டார்கள். நான் என்னை நானே பார்த்துக் கொண்டேன். என் உள்ளத்தில் புயலாகச் சீறி எழுந்த ஆத்திரம்....பொங்கிக் குமுறி யெழும் கடலென வந்த கோபம், தாக்கப்பட்ட பைந்நாகம் போல் பாய்ந்தெழுந்த சீற்றம்....போன இடம் தெரியாமல் மறைந்து விட்டது. நான் குன்றிப்போய் விட்டேன். என் கண்களில் கண்ணீர் துளிர்த்துக் கொண்டிருந்தது. இன்னும் சற்று நேரம் அங்கே நின்று கொண்டிருந்திருந்தால் நான் கேவி அழுதிருப்பேன். ஆம்... நான் இன்று மனிதனாக இல்லை. மனிதர்களால் வெறுத்தொதுக்கப்படும் புழுவின் நிலையிலே இருக்கிறேன். கையாலாகாதவனாக, கோழையாக, உயிருடன் நடமாடும் மனிதப் பிண்டமாக மாறிவிட்டேன். உண்மையில் கமலா மாறிவிட் டிருப்பாளானால் நான் அவள் முன் போவது கேவலம். அவள் என்னைத் துரும்பளவு கூட மதிக்கமாட்டாள். 'கட்டிய மனைவியைக் கதியற்ற நிலையில் விட்டுவிட்டுக் கண் காணாது ஓடிவிட்ட கபோதிதானே நீ....என்று அவள் கேட்கத் துணிந்துவிட்டால்......அந்த அவமானத்தைச் சகித்துக் கொள்வதைவிட நான் அப்பொழுதே இறந்தொழிந்து போவதுதான் நல்லது. ஆம்....நான் இனி

ஏன்தான் உயிருடன் இருக்கவேண்டும். வாழ்க்கையில் எனக்கிருந்த எல்லா நம்பிக்கைகளும் தகர்ந்து விட்டன. நான் மனிதனுகவே வாழ முடியாத நிலைமையை அடைந்துவிட்டேன். நான் இன்னும் எதற்காகத்தான் உயிருடன் இருக்கவேண்டும். நடைப்பிணமாக ஏன்தான் வாழவேண்டும்....?

பித்துப் பிடித்தவன் போல் நான் நடந்து சென்றேன். என் உணர்வு என்னிடம் இல்லை. என் அறிவும் என் வசம் இல்லை. எப்படியோ மனம்போன போக்கில் எங்கோ நடந்து செல்கிறேன். காரிருள் வானமும் கண் சிமிட்டும் நட்சத்திரங்களும் என்னைக் கரம் நீட்டி அழைக்கின்றன. நான் மனித உலகிலே வாழத் தகுதியற்றவனுகி விட்டேன் இனி அங்கே தான் அடைக்கலம் புகவேண்டும்.

* * *

## 17. மாணிக்க முதலியார்.

என் வாழ்விலே ஏன்தான் இப்படித் தொல்லைகள் வந்து மோதுகின்றன ?

பெண்களைப் பெற்றவர்கள் பாடு பெரும்பாடு என்று கூறப்படுவது பொய் என்று நினைத்தேன். அதைப் பொய்யாக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். என் அருமைக் குழந்தைகளைச் செல்வமாக வளர்த்தேன். அவர்களுக்கு நான் எந்தக் குறையும் வைக்கவில்லை.

கமலா விமலா என் இரு கண்மணிகளாய் இருந்தனர். மனைவி இறந்த பிறகு எனக்கு அவர்கள் வாழ்வின் லட்சியங்களாய்த் திகழ்ந்தனர். கமலாவின் பரந்த நெற்றியைக் காணும் பொழுது, அமைதிதவழும்

அவளுடைய அழகிய முழு நிலா முகத்தைப் பார்க்கும் பொழுது என் கனவிலே மனித வாழ்வின் முழுப் பயனும் வந்து நிற்கும். மனிதன் வாழ்கிறான். எதற்காக அன்பு செலுத்துவதற்காக, நேசிப்பதற்காக, அன்பு ஒன்று தான் வாழ்க்கையை வாழ்க்கையாக்குகிறது. இந்தக் கருத்துக்களை நான் என்றென்றும் மறப்பதில்லை. அது ஒவ்வொரு தடவை என் குழந்தைகளின் முகங்களைப் பார்க்கும்பொழுதும் என் நினைவில் திருப்பத் திரும்ப வந்து போகும். ஆனால் இன்று அவற்றின் வாழ்வு என் கண்ணெதிரே சீர் குலைந்து விழுவதைக் காணும் பொழுது....?

ஒரு தந்தையின் வேதனையை எந்த வார்த்தைகளால் வெளியிட முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. என் உள்ளம் துடிக்கிறது. கலைஞன் ஒருவன் காலம் பல வருந்தித் தன் கற்பனைத்திறன் அத்தனையும் இழைத்து வண்ணமாக்கிய ஓவியம் ஒன்று அவன் கண் முன்னே கலையறியாம் கசடர்களால் அலங்கோலமாக்கப்பட்டால் அவன் உள்ளம் என்ன பாடு படும்...? பொன்னும் பொருளும் குவித்துப் புதுமைக்கு இலக்காக்கிய பேரெழில் மாளிகையை ஆக்கிப்படைத்தோன் ஒருவன், அவன் கண் எதிரே அது அழிந்து குலைந்து படுதல் கண்டால் என்ன பாடு படுவான்....? ஆனால்.... அவற்றால் எல்லாம் என் நிலையை ஒப்புக்கூற முடியுமா...? நானோ என் கண்மணிக் குழந்தைகளை உயிர் உள்ள ஓவியங்களாய் கருதினேன், என் வாழ்வின் லட்சியப் படைப்புகளாகக் கண்டேன். அவர்கள் இன்று....!

கண்ணீரில் கரையாத சோகச் சித்திரமாய் நடமாடும் கமலா என் ஆவியை அள்ளிக்கொண்டு போகிறாள். விமலாவுக்கும் அந்தக்கதியா வரவேண்டும்?

நடேச முதலியார் என்னிடம் வந்தார். நான் வழக்கம்போல் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றேன். ஆனால், நேற்றிரவு அவர் என்னை விட்டுப்பிரியும்போது அவர் கண்களிலே குதித்தாடிய மகிழ்ச்சி எங்கே? ஆர்வத்துடன் என்னைவிட்டு அகலும்போது அவர் காட்டிய நேசபாவம் எங்கே? நான் ஒளி தவழும் கண்களுடன் அவரை வரவேற்றேன். அந்த முகத்தைப் பார்த்ததும் என் கண்களிலே சுடர் விட்டுக்கொண்டிருந்த அந்த ஜோதி அணைந்து விட்டது. நான் மெதுவாக, "ஏன் உடம்பு சரி யில்லையா?" என்று கேட்டேன்.

"அவர் இல்லை என்று தலையசைத்தார்...."

"யாருக்காவது....?"

"ஒன்றும் இல்லை...."

"ஏன் ஒருமாதிரி இருக்கிறீர்கள்....?"

அவர் ஒருமாதிரியாகக் கூறினர். "நான் ஒரு பிஸினெஸ்மேன் மாத்திரம் அல்ல. உணர்ச்சி வசப்பட்டவன். ஏசிகன், மற்றவர்களுக்குத் துன்பம் உண்டாவதைக்கூட என்னால் சகித்துக்கொள்ள முடிவதில்லை....

"யாருக்கு என்ன துன்பம்?"

"நான் ஒரு வெறும் வியாபாரியாக மாத்திரம் இருந்தால் உணர்ச்சிகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ளவே மாட்டேன். என்னை ஒரு சிறிதளவு ஏமாற்றுபவர்கள்கூட லேசில் தப்பிவிட விட்டு விட மாட்டேன்...."

"யாராவது உங்களை ஏமாற்றி விட்டார்களா?"

"ஆமாம். நான் யாரை ரொம்பவும் நம்பி அவர்களுடைய முன்னேற்றத்திற்காக அரும்பாடு பட்டேனே அவர்கள்...."

“ அப்படிப்பட்ட துரோகிகள் யார்....”

“ மன்னிக்கவேண்டும் நீங்கள்தான்....”

“ நானு....?—நான் திடுக்கிட்டுப்போய் விட்டேன். எனக்குத் தலே சுற்றுவதுபோல் இருந்தது. ஆனுல்.... நான் அவருக்கு என்ன துரோகம் செய்து விட்டேன் என்பது எனக்குப்புரியவில்லே, கவலேயுடன் அவர் முகத்தைப் பார்த்தபடி நான் உங்களுக்கு என்ன துரோகம் செய்து விட்டேன்....” என்று கேட்டேன். என் குரல் சம்மிற்று.

அவர் தொடர்ந்து கூறினர். ஆனுல், உங்களேச் சொல்லக்குற்றம் இல்லே. என்மேல் தான் தவறு. கோத்திரம் அறிந்து பெண்ணேக்கொள் என்று சொல் வார்கள். உங்கள் மகளே மருமகளாக்கிக்கொள்ள நினேக்கும் முன் நான் யோசித்துப் பார்த்திருக்க வேண்டும்...

நீங்கள் சொல்வது எனக்குப்புரிய வில்லேயே... விமலா ஒரு குற்றமும் அறியாதவள்....

ஆனுல் கமலா....?

எனக்குத்தூக்கி வாரிப் போட்டது. நான் தழு தழுத்த குரலில் “ கமலாவும் அப்படியே.... சபேசன் விமலாவை விரும்புகிருன் என்று தெரிந்ததும் நீங்கள் எப்படி அவர்களுக்கு மணம் செய்துவைக்கத் தீர்மானித்தீர்களோ அதைப் போல் கமலா ரகுவைக் காதலிப்பதை அறிந்ததும் நான் அவர்களுக்கு மணம் செய்து வைத்தேன்.

“ அந்த ரகு வேற்று ஜாதியைச் சேர்ந்தவனு?

“ ஆமாம். ஆனுல் மனிதர்களிலே உத்தமன். அவனேப்போல் நல்ல பையனேப்பார்க்க முடியாது....

" அந்த யோக்யன் ரகு எங்கே....? உங்கள் மகளை விட்டு விட்டு ஓடி விட்டான் என்பது நிஜமா....?

" அது பொய், உங்களை யாரோ ஏமாற்றி விட்டார்கள் என்று நினைக்கிறேன். வேலை கிடைக்காமையால் வறுமையால் மிகவும் துன்புற்றுப் பட்டாளத்தில் சேர்ந்துவிட்டான்...

" மாணிக்கம். உலகம் பல விதமாகச் சொல்லும். என் கவுரவத்திற்கு....அந்தஸ்திற்கு உன்னைப்போன்றவனுடன் சம்பந்தம் செய்து கொள்வது சரியா ? நீயே சொல்...

"அதை முன்பே யோசித்திருக்க வேண்டாமா....?"
" நீ என்னிடம் கமலாவின் விஷயத்தை முன்பே தெரிவித்திருக்கலாமே....?

என்னல் பேச முடியவில்லை. சிறிது நேரம் மௌனமாக இருந்த பின் நடேச முதலியாரைப் பார்த்து.... " இப்பொழுது அதை எல்லாம் பற்றி யோசனை செய்யாதீர்கள். நம்முடைய குழந்தைகளின் நல் வாழ்க்கையைப் பற்றி யோசனை செய்யுங்கள். அவாகள் நம் கண் முன்னே உள்ளம் உடைந்து உருக்குலைந்து போகவிடலாமா....? யோசனை செய்து பாருங்கள்...." என்று மனமுருகக் கெஞ்சினேன். அவர் எழுந்து விட்டார். வாயிற் படியை நோககி நடந்து கொண்டே " நான் எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். இனி அத் திருமணம் நடைபெருது...." என்று சொல்லிக் கொண்டே போய்விட்டார்.

இடியுண்டவன்போல் நான் திகைத்து நின்றேன். ஆயிரம் ஈட்டிகள் என் உள்ளத்தைக் கூறு கூருகத் துளைப்பதைப்போல் உணர்ந்தபடி நின்றேன். நான் எங்

நேரம் அப்படி நின்றுகொண்டிருந்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. விமலாவும் சபேசனும் ஆனந்தமாகப் பேசிச் சிரித்துக்கொண்டு வந்தனர் என் உள்ளம் விம்மியது. ஐயோ....இவர்கள் எவ்வளவு ஆனந்தமாக இருக்கின்றனர். வசந்தகாலமலர் போல் இளமையின் பூரிப்பில் மகிழ்ந்து நிற்கும் என் மகள் வாலிபத்தின் விழிப்பிலே இலட்சியக் கோட்டைகளின் தலை வாசலிலே நிற்கும் இளங்காளை சபேசன்....! நான் அவனுக்காகவும் மனம் வருந்தினேன். நான் ஒரு தந்தை....! தந்தைமார் எல்லோரும் சிறியவர்களாக இருந்து பெரியவர்களானவர்கள் தானே...? அவர்கள் தங்கள் இளமையிலே எப்படி இருந்தார்கள் என்பதை ஏன் தான் மறந்து விடுகிறார்கள்? — இவர்கள் காதல் சிட்டுக்கள் போல் இன்பவானை அளாவிப் பறந்து திரிந்து வருகின்றனர். இவர்களைப் பிரித்து விட வேண்டிய கொடுமையான கடமை என் தலைமேல் வந்து சுமந்திருக்கிறது. விமலா என்னைப் பார்த்துவிட்டு "ஏன் அப்பா ஒருமாதிரியாகஇருககிறீர்கள்?" என்று கேட்கிறாள். நான் நடேச முதலியாரைக் கேட்ட அதே கேள்வி...என் கண்களில் கண்ணீர் துளிர்த்து விட்டது...."விமலா....சபேசா....நீங்கள் ஒருவரை ஒருவர் மறந்து விடவேண்டும்....

இந்த வார்த்தைகள் அவர்கள்காதுகளிலே எப்படி விழுந்திருக்கும் என்று எனக்குத் தெரியாதா? அப்பா ...என்றுகூவினாள் விமலா. சபேசன் திகைத்து நின்றான். அவளை என் அருகே அழைத்து என் தோளில் சாய்த்துக்கொண்டு "சபேசன் நன்மைக்காக...." என்றேன். என் மகள் பேசவில்லை. அவள் என் தோளிலே சாய்ந்துகொண்டு விம்மிக் கொண்டிருந்தாள்.

"என் நன்மைக்காகவா....? என்று உடைந்து போன குரலில் கேட்டான் சபேசன்"

"ஆமாம். தம்பீ........நீ வயதில் சிறியவன். வாழ வேண்டியவன். வாழ வசதி உள்ளவன். என் மகளை நான் எப்படி நேசிக்கிறேனே அதே போல்தான் உன்னையும் நேசிக்கிறேன். என் மகளின் வாழ்வு கெட்டுப் போவதை நான் எப்படி விரும்ப மாட்டேனே....அதே போல் உன் வாழ்வு குலைந்து போவதையும் நான் விரும்பமாட்டேன். சபேசா....உனக்கு வாழ அருமையான சந்தர்ப்பம் இருக்கிறது. நீ அதை இழந்து விடாதே........!

"மாமா....ஏன் தான் இப்படி எல்லாம் சொல்கிறீர்கள்? நான் உயிரோடிருப்பது உங்களுக்கு பிடிக்கவில்லையா....?

"சபேசா....உனக்கு உயர்ந்த குடும்பத்திலிருந்து அழகிய மனைவி கிடைப்பாள். உன் அப்பா தேடி வைப்பார். உன் இன்ப மயமான எதிர்காலத்தைப் பார்த்து மகிழ்ச்சி அடையத்தான் நான் ஆசைப்படுகிறேன். அதனுலேயே சொல்கிறேன்...."

"அப்பா நான் விமலாவை மணந்து கொள்ளச் சம்மதித்திருக்கிருர். உங்களுக்கும் தெரியும்..."

"இல்லை....தம்பீ! இப்பொழுது அவர் மனத்தை மாற்றிக்கொண்டார். உன்னிடம் எப்படி விளக்குவது என்று எனக்குப் புரியவில்லை." ஆனல்........

"தம்பீ....எங்கள் குடும்பம் களங்கம் நிறைந்தது. அந்தஸ்தில் குறைந்தது என்ற முடிவுக்கு அவர் வந்து விட்டார். இந்தச் சம்பந்தம் தம் கவுரவத்திற்கு அவமானகரமானது என்று நினைக்கிருர்.

"ஆனல்...."—சபேசன் ஏதோ ஆத்திரத்துடன் கூற வந்தான். நான் குறுக்கிட்டேன், "நீ அவருடைய ஒரே மகன். அவர் உன்மேல் அளவு கடந்த ஆசை வைத்திருக்கிறார்."

"என்னல் இதைச் சகித்துக் கொள்ளமுடியாது. விமலாவைப் பிரிந்து என்னல் வாழ முடியாது. அதைவிட நான் சாவேன்....சாவையே வரவேற்பேன்...."

"தம்பீ....அப்படி நினைக்கக்கூடாது. இளைஞர்கள் இந்த சிந்தனையில் தான் தவறு செய்கிறார்கள். விமலாவைவிட நல்ல பெண் உனக்குக் கிடைப்பாள்...

"நீங்களும் அப்படிச் சொல்லாதீர்கள். அப்பாவைப் பற்றி நான் கவலைப்படவில்லை. நீங்கள் என்னைப் புறக்கணித்து விடாதீர்கள். ஐயோ அதை என்னல் சகித்துக் கொள்ள முடியாது."

'சபேசா....இந்த வாழ்வு உன் தந்தையால் நான் அடைந்தது. நான் அவருக்குத் துரோகம் செய்ய மாட்டேன். தவிர....என் ஒரு பெண்ணை இதைப் போல் கல்யாணம் செய்து கொடுத்து நான் பட்ட துன்பம் போதும். இனியும் அதைப்போன்ற துன்பத்தை என்னல் தாங்க முடியாது. சபேசா....நான் ஏழை... கிழவன்....வாழ்க்கையிலே போராடத் தெம்பில்லாதவன். என்னை மன்னித்துவிடு........

விமலா விம்மிக்கொண்டு தன் அறைக்கு ஓடிச் செல்கிறாள். சபேசன் தலையைக் குனிந்து கொண்டு வெளியேறுகிறான். நான் குழந்தையைப் போல் அழுது கொண்டு ஆசனத்தில் சாய்கிறேன். நான் என்ன செய்வேன்? என்னல் என்ன செய்ய முடியும்....? என்னதான் செய்ய முடியும்?

* * *

## 18. விமலா.

மனிதன் வாழ்க்கையிலே ஒரு தடவை தான் சாகிறான். ஆனால், அவன் வாழ்க்கையிலே சாவுச் சிந்தனை எத்தனை தடவை வந்துவந்து மோதுகிறது ?

அது இன்ப துன்பங்களின் இறுதி என்பதாலா ? பொல்லாத போராட்டத்தின் முடிவு என்பதாலா...? ஏற்றத்தாழ்வுகளின் விடிவு என்பதாலா....? என்னைப் போல்....வாழ்வின் சுவையை, இனிமையை, இன்பத்தை, லட்சியத்தை இழப்பதிலும் தவிப்பதிலும் இருந்து விடுதலை என்பதாலா....?

வாழ்வதில் என்ன பயன்....? நான் இனி உயிருடன் இருப்பதால் யாருக்கு லாபம். மனம் உடைந்து போய்க் கண்ணீர் விட்டுக் கதறிக்கொண்டு வந்து என் அறைக்குள் விழுந்தேன். விசித்து விசித்து அழுது கொண்டிருந்த பின், இதயத்தை அழுத்தும் துயரத்துடன் மனதில் எதையோ நினைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். என் கண் எதிரிலே சாளரத்திற்கு வெளியே அழகிய புறாக்கள் பறந்து கொண்டிருந்தன. அந்த வெண் புறா கவிஞனின் கற்பனை போல் லாகவமாகச் சுழன்று சுழன்று பறந்துகொண்டிருந்தது. இதயம் வரண்டுபோன நிலையிலே வெறித்துப்போன பார்வையுடன் நான் அந்தப் புறாவைப் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் எதிர்பார்க்கவில்லை. பாய்ந்து வந்த பருந்து ஒன்று ஒரே பாய்ச்சலில் அந்தப் புறாவைப் பிடித்துவிட்டது. சாவின் கரத்திலே அந்த அழகிய சின்னஞ் சிறு உடல் துடிதுடிப்பதை நான் பார்த்தேன். பருந்து மறைந்து விட்டது. ஆயினும், நான் வான வெளியிலே அந்தப்

பயங்கரக் காட்சியை நினைவுக் கண்ணிலே பார்த்துக் கொண்டே இருந்தேன்.

அக்காள் தான் சாக நினைத்த வரலாற்றைக் கூறியபோது 'உனக்கு என்ன பைத்தியமா பிடித் திருந்தது' என்று நான் கோபமாகப் பேசினேன். ஆனல். இன்று....?

என் நினைவிலே வாழ்வு அநித்தியமானது வாழ்வு அநித்தியமானது என்ற குரல்....ஏதோ ஒரு விதமான குரல்....பூவைச் சுற்றிச் சுற்றி ரீங்காரமிடும் வண்டின் குரலில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. ஆமாம் வாழ்வு அநித்தியமானது தான் என்றைக்கிருந்தாலும் ஒரு நாள் செத்தேதான் ஆகவேண்டும். ஆறிலும் சாவு, நூறிலும் சாவுதான். வாழ்ந்தார் வாழ்ந்தபடி எல்லாம் வாழினும்வரும் இறுதி சாவுதான் அல்லவா...!

சாவு....அது எவ்வளவு நிச்சயமானது? எவ்வளவு நிர்மலமான? எவ்வளவு அற்புதமானது....?

ஆமாம், அமைதியாக, அழகாக நான் படுத் துறங்குவேன். பிறகு எழுந்திருக்கவே மாட்டேன். அழகிய நிலா தன் முழு ஒளியுடன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இளம் செடி கொடிகள் இன்பத் தென்றலிலே அசைந்தாடிக் கொண்டிருக்கின்றன. ஆமாம். இந்த நிலவு எவ்வளவு மனோகரமாக இருக் கிறது? எவ்வளவு அழகாக இருக்கிறது? இந்த அழகிய இரவிலே அழகிய முறையிலே சாவைத்தழுவ வேண்டும். சஞ்சலமற்ற அமைதியிலே ஆழ்ந்து விட வேண்டும். ஆமாம் அதுதான் என் ஆசை....!

அப்பாவுக்கு ஏதோ ஒரு காலத்திலே வாங்கி வைத்திருந்த விஷம் கலந்த மருந்து, பெட்டியில் இருந்

தது. அது என் நினைவுக்கு வந்தது. யாரும் அறியாமல் அதை எடுத்துக்கொண்டு வந்து வைத்துக்கொண்டேன். இரவிலே நான் சாப்பிடமாட்டேன் அழுது கொண்டே கிடப்பேன் என்று அப்பா எதிர் பார்த்திருப்பார். என்னைச் சமாதானம் செய்வது எப்படி என்பதைப்பற்றி அளவற்ற கவலையுடன் யோசனை செய்து கொண்டிருந்திருப்பார். ஆனல், நான் அமைதியாகச் சாப்பிடச் சென்றேன். நாளை முதல் நான் சாப்பிடவா வரபோகிறேன் ? இன்று கிடைக்கின்ற இந்தக்கடைசி உணவை ஏன் அம்மா விட்டு விட வேண்டும். சாப்பிட்டேன். குடிப்பதற்காகப் பாலும் எடுத்துக்கொண்டு என் அறைக்குச்சென்றேன்.

பாலை வைத்துக்கொண்டு விஷக் குப்பியைக் கையில் எடுத்த பொழுது என்னை மீறித்துக்கம் வந்து விட்டது. தேம்பி அழுது விட்டேன். நான் சாவதற்காகவா பிறந்தேன். ஆம்! பிறந்த எல்லோரும் என்ருவது ஒருநாள் சாகத்தான் பிறந்திருக்கின்றனர். ஆனல், யாருமே சாவைத்தேடிக் கொள்ளப் பிறக்கவில்லை. அந்தத் தலைவிதி அபாக்கிய வதியான எனக்குத்தான் வந்திருக்கிறது....அழுவதும் தொழுவதும். ஆசையும் பாசமும், கனவும் நினைவும் எல்லாம்.... என்னைப்பொறுத்த வரையில் இன்னும் சிறிது நேரத்தில் ஒய்ந்துவிடும். அதன் பிறகு அமைதி! குன்ரு அமைதி ! நிறைவுற்ற அமைதி ! நிலையான அமைதி !

நான் விஷக்குப்பியைப் பாலில் சாய்த்தேன். குடிக்க வாய் அருகே கொண்டுபோனேன். பால் டம்ளர் தடாலென்று கீழே தட்டி விடப்பட்டது. தூக்கி வாரிப்போட்டுக்கொண்டு நான் எழுந்து நின்றேன். என் எதிரே பாலு நின்று கொண்டிருந்தார்.

நான் அழுதுகொண்டு படுக்கையில் விழுந்தேன். இந்த வேளையில் இவர் எங்கே வந்தார்? இவர்தான் என் அக்காவின் கல்யாணத்தை முடித்து வைத்தார். என் கல்யாணத்தையும் முடித்து வைப்பாரா? அவர் மெதுவான குரலில் " விமலா....விமலா இது என்ன வேலையம்மா...? என்ன புத்திகெட்ட பெண்ணாக இருக்கிறாய் நீ....அவன் மணந்து கொள்ளாவிட்டால் உன்னை மணந்து கொள்ள ஆயிரம்பேர் காத்திருப்பார்கள். அப்படித்தான். அவனையே மணந்து கொள்ளவேண்டுமானாலும் அதற்கு நான் ஏற்பாடு செய்ய மாட்டேனா? என்னிடம் சொல்லியிருக்கக்கூடாதா...? விஷத்தைச் சாப்பிடப் போகிறாயே அம்மா...பைத்தியக்காரி....! என்றார்.

விம்மல்களை நெஞ்சில் புதைத்துவிட முடியவில்லை, அழுதுகொண்டே " நான் எதற்காக வாழவேண்டும் " என்றேன். அவர் ஒரு கணம் யோசித்த பின். " நடேச முதலியார் மனதை மாற்றவேண்டும். அவ்வளவுதானே. நீ என்னோடு வா..." என்றார்.

" உங்களோடு வந்தால்....

" நாம் அவரிடம் போவோம். நீ அவர் காலைப் பிடித்துக்கொண்டு உன் துயரத்தைச் சொல். நானும் சொல்கிறேன். வெளியே கார் நிற்கிறது எழுந்து வா' என்றார். எனக்கு அப்போதிருந்த மன நிலையிலே எதையும் சிந்திக்கவே சக்தி அற்றவளாக இருந்தேன் நான். நான் அவரோடு புறப்பட்டு விட்டேன். அவர் கூறியபடி வெளியே காரும் நின்றது. நாங்கள் அதில் ஏறப்போனோம். நான் நினைக்கிறேன் அந்தக் காரில் நான் ஏறியிருந்தால் தற்கொலையை விட மோசமான நிலைக்கு அழைத்துச் செல்லப்பட்டிருப்பேன் என்று என்னையோ அக்காவையோ ஏமாற்றிப் பிடித்துக் கொண்டு எங்கோ கண் காணாத தூரத்திற்கு ஓடிச் செல்ல பாலு திட்டமிட்டிருந்தது பின்னால் அல்லவா தெரிய வந்தது ?

எப்படித்தான் ஒரு நொடிக்குள் அத்தகைய விசித்திரம் நடந்தது என்பது எனக்கே தெரியவில்லை. நான் காரில் ஏறப் போனேன். ஒரு நொடிக்குள் மோட்டார் சைகிள்கள் நாலு திசைகளிலும் இருந்து வந்து எங்கள் வீட்டைச் சூழ்ந்துகொண்டன. போலீஸ் லாரி ஒன்று வேகமாக வந்தது. பாலு தப்பி ஓட முயன்றார். வேட்டுச் சப்தம் கேட்டது. சப் இன்ஸ் பெக்டர் கையிலே இருந்த துப்பாக்கி புகைந்துகொண்டிருந்தது. பாலுவின் இடுப்பிலே இருந்து இரத்தம் வழிந்துகொண்டிருந்தது. அதன் பிறகு அவர் ஓடவில்லை.

அப்பா எழுந்து ஓடி வந்தார். அவருக்கும் ஒன்றும் புரியவில்லை. பாலு கைது செய்யப்பட்டார். அவரோடு அன்று கச்சேரிக்கு வந்திருந்த பாங்க் ஏஜெண்டும் கையில் விலங்குகளுடன் காட்சி அளித்தார். இன்னும் யாரோ ஒருவன். நகைக் கடை சேட்டாம்! அவனும் காணப்பட்டான்.

அந்தக் கார் சோதனையிடப்பட்டது. அதற்குள் பெட்டி பெட்டியாக நகைகளும் நோட்டுக் கத்தைகளும காணப்பட்டன. அதிலே அக்காவினுடைய 'நெக்லஸும்' கூட இருந்தது. எங்களால் ஒன்றும் நம்ப முடியவில்லை. பாலு முதலியோர் போலீஸால் அழைத்துச் செல்லப்பட்டனர். போலீஸார் மறு நாள் காலையில் அப்பாவை ஸ்டேஷனுக்கு வரச்சொல்லி விட்டுப் போயினர். ஒன்றும் புரியாது திகைப்படைந்த நிலையிலே நான் போய்ப் படுக்கையில் விழுந்தேன். உறங்கி விட்டேன்.

* * *

## 19. சபேசன்.

அப்பா என் வாழ்வை முறித்துவிட்டார்...

மாமா என்னிடம் பேசும் பொழுது அவர் குரல் தழுதழுத்தது. நான் ஏதாவது பேசியிருந்தால் அவர் கண்ணீர் விட்டு அழுதிருப்பார். அவருடைய பரிதாப

கரமான நிலைமையை நான் உணர்ந்து கொண்டேன். அவர் திரும்பத் திரும்ப என்னுடைய நன்மைக்காகவே கூறுவதாகக் கூறினார். நான் நல்ல பிள்ளை என்றும் தந்தையை மீறி எதுவும் செய்யக் கூடாதென்றும் கேட்டுக் கொண்டார். ஆனால்........?

உபதேச வார்த்தைகள் சொல்வதற்கு எளி தானவைதான். ஆனால் அனுபவத்தில்....? மாமா வெறும் உபதேச வார்த்தைகளாகக் கூறவில்லை. அவ ரைப் பற்றி எள்ளளவும் குறை கூற முடியாது. அவ ருடைய பெருந்தன்மையும் உள்ளம் கனிந்த அன்பும் அவ்வளவு துயரத்திற்கிடையிலும் என் உள்ளத்தைக் குலுக்குகின்றன. ஆனால் அப்பா........

நான் கோபத்துடன் வீட்டிற்குள் நுழைந்தேன். அப்பா சாதாரணமாக உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். நான் அவர் எதிரில் வந்து நின் றேன். அவர் என்னை நிமிர்ந்து பார்த்து விட்டு மீண் டும் பேப்பர் படிப்பதில் ஆழ்ந்தார் எனக்கு ஆத்திர மாக வந்தது. "அப்பா..." என்று கூவினேன் அவர் பேப்பரைப் பார்த்தபடியே, "என்ன?" என்று கேட்டார். ஒரு கணம் என்னால் பேச முடியவில்லை என் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. "அப்பா நீங் கள் மாமாவிடம் என்ன சொல்லி விட்டு வந்தீர்கள்....?

அவர் பேப்பரைக் கீழே வைத்துவிட்டு என்னைச் சாவதானமாகப் பார்த்துக்கொண்டு..."மணி எட்டாகி விட்டது போய்ச் சாப்பிட்டுவிட்டு வா பிறகு பேசலாம்" என்றார்.

நான் கூவினேன், "இல்லை. என்னுடைய உண் மையான நிலைமை தெரியும் வரை நான் இந்த வீட்டில் சாப்பிடப் போவதில்லை....''

"உண்மையான நிலைமை தெரியாமல் தான் நாம் பல தடவை ஏமாந்து போகிறோம். தெரிந்து கொண் டால் பிறகு திருத்திக்கொள்ள வேண்டியதுதானே...?

"எதைத் திருத்திக் கொள்வது...."

"சபு!....உனக்கு நல்ல குடும்பத்தில் நல்ல பெண்ணைகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைக்கிறேன். சும்மா கோபத்தில் கண்டதும் கடியதும் பேசிக்கொண்டிருக்காதே. போய் உன் வேலையைப் பார்...."

"அப்பா.......அது இந்த ஜென்மத்தில் நடைபெறாது. மணந்து கொண்டால் நான் விமலாவைத்தான் மணந்து கொள்ளமுடியும். வேறு பெண்ணைப் பற்றி என்னல் கனவில்கூட நினைக்க முடியாது.

"சரி, அதைப்பற்றி சாவகாசவாக யோசிப்போம்.

"முடியாது. இப்பொழுது முடிவு கட்டியாக வேண்டும்....

"நான் என்ன உன்னுடைய குமாஸ்தாவா....?

"நானும் உங்களுக்கு அப்படி அல்ல....

"சபேசா....நான் உன்னுடைய தந்தை உன்னை விட எவ்வளவோ அனுபவம் உடையவன். நான் சொல்வதைக் கேள் விமலா உனக்குத் தகுதியானவள் அல்ல. அவர்களுடைய குடும்பம் கேவலமானது. அந்தப் பெண் கமலா....ஓடிப்போனவள்....

நான் ஒரு கணம் திகைத்தேன். "அப்பா....... யார் எப்படி வேண்டுமானலும் இருக்கலாம். ஆனல் நான் விமலாவைக் கைவிட முடியாது....

எங்கள் விவாதம் எவ்வளவு நேரம் நீடித்தது என்பது சொல்ல முடியாது. ஆனல் முடிவு நான் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டுக் கிளம்புவதாகத்தான் இருந்தது. எங்காவது கண் காணுத தூரத்திற்குப் போய்விட வேண்டும் என்ற முடிவில் பம்பாய்க்கு ஒரு டிக்கட் வாங்கிக் கொண்டு மெயிலில் ஏறி உட்கார்ந்தேன்.

பம்பாய் எக்ஸ்பிரெஸ் காரிருளைத் துளைத்துக் கொண்டு கிடு கிடு வென்று போய்க் கொண்டிருந்தது. நான் கண்ணை மூடிக்கொண்டு கவலை நிறைந்த சிந்

தனைகளிலே ஆழ்ந்து போயிருந்தேன். என் கற்பனை எல்லாம் அப்பொழுது விமலா என்ன செய்து கொண்டிருப்பாள் என்றுகண்டுபிடிக்க முயல்வதாக இருந்தது.

அவள் படுக்கையிலே விழுந்து விம்மி அழுது கொண்டிருப்பாள். பனிக்கால சந்திரன்போல் அவள் முகம் வெளுத்துப் போயிருக்கும். கண்கள் கசங்கிய கருங்குவளைகள் ஆகியிருக்கும். கலைந்து விழும் கூந்தலுடன் தன் இளரோஜாக் கன்னங்களிலே கண்ணீர் தழும்பேற அவள் கதறிக் கொண்டிருப்பாள். அவளுடைய மென்மையான இதயம் துயர ஈட்டிகளால் துளைக்கப்பட்டிருக்கும். தன் அல்லிக் கரத்திலே அலர்ந்த தாமரைபோன்ற முகத்தைத் தாங்கியவளாய் தன் வாழ்வைப்பற்றி இல்லையேல் சாவைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பாள். ஐயோ சிந்தனை என்னை சித்ரவதை செய்கிறது.......!

நான் ஏன்தான் விமலாவை விட்டு வந்தேன். அவள் அருகில் உட்கார்ந்து கொண்டு, எங்கள் இருவரையும் ஒன்ருக வாழ அனுமதியுங்கள் இல்லையேல் சாக அனுமதியுங்கள் என்று சத்தியாக்ரகம்செய்திருந்தால்... ....? எனக்கு அப்போதில்லாமல் போய்விட்டதே இந்தப் புத்தி....

நான் எவ்வளவு நேரம் இப்படிப் பட்ட கவலை நிறைந்த சிந்தனைகளில் ஆழ்ந்து போயிருப்பேன் என்பது எனக்கே தெரியவில்லை. வேகமாக ஓடிக் கொண்டிருந்த ரயில் திடீரென்று நிறுத்தப்பட்டது. வண்டி ஒரு குலுக்கு குலுக்கிவிட்டது. என் சிந்தனைகள் தடைப்பட்டன. எக்ஸ்பிரெஸ் அந்த இடத்தில் ஏன் நிறுத்தப்பட்டது என்பதன் காரணம் தெரியவில்லை. வண்டியில் இருந்தவர்கள் ஜன்னல்கள் வழியாக இரண்டு பக்கங்களிலும் வெளியே பார்த்துக் கொண்டிருந்தார்கள். யாரோ ஒரு பெண் அடிபட்டு விட்டாளாம் என்ற பேச்சு மிதந்து வந்தது. எனக்கு வந்த முதல் நினைவு என் விமலாவாக இருந்தால்....?

நான் பரபரப்புடன் இறங்கி வந்தேன். ரயில் அடியிலிருந்து அந்தப் பெண்ணின் உடல் எடுக்கப் பட்டு முதல் சிகிச்சை செய்யப்பட்டுக் கொண்டிருந்தது அவள் அழகிய முகத்தைப் பார்த்தேன். பதறி விட்டேன். "கமலா"! என்று கூவிவிட்டேன் நான்.

* * *

**20. ரகு.**

இந்தச் சில நாட்களாக என்னுடைய உள்ளம் எப்படி இருந்ததென்று சொல்ல முடியவில்லை ஒரே குழப்பமும் போராட்டமுமாக அல்லும் பகலும் போராடும் இதயத்தோடு நான் போராடிக் கொண்டிருந்தேன். சில சமயங்களில் விபரீதமான சிந்தைகளில் மூழ்கிப்போய் வெளியேற வகை தெரியாமல் தத்தளித்துக் கொண்டே இருப்பேன். என் வாழ்க்கை அலங்கோலமாகி விட்டது. வலையிலே அகப்பட்ட முயல் போல் நான் தடுமாறிக் கொண்டிருந்தேன்.

சில சமயங்களில் அப்பாவைப்போய் பார்க்கலாம் என்று நினைப்பேன். யாருக்காக நான் அவரையும், செல்வமும்செல்வாக்கும் நிறைந்த என் குடும்பத்தையும் விட்டு வெளியேறினேனோ அவளே எனக்குத் துரோகம்செய்துவிட்ட பின்னல்.... மூடவனை நான் தனித்துக்கிடப்பதில் அர்த்தம் இல்லை. பயனும் இல்லை. என்று நினைப்பேன். ஆனல் அப்பாவின் கொடிய குணம் என் நினைவுக்கு வரும். அடுத்த கணம் என் இதயத்தில் ஏதோ ஒன்று, "கமலா எனக்குத் துரோகம் செய்யமாட்டாள்....செய்திருக்க மாட்டாள்" என்று திரும்பத் திரும்பக் கூறும்.

கமலாவைப் போய்ப் பார்க்கலாம் என்று நினைப்பேன். ஏன்....நாம் நேரில் போவோம். நம்மைக் கண்டதும் அவள் எப்படி உணர்கிருள் என்று பார்ப்போம். இந்தப் புதிய சூழ்நிலையிலே அவள் நம்மை எப்படி வரவேற்கிருள், எப்படி நடத்துகிருள் என்று பார்ப்போம் என்றெல்லாம் நினைப்பேன். அடுத்த

கணம் சீ! வாழ்க்கையிலே இத்தனை தோல்விகள் போதாதா....? இன்னுமா தோல்விகளை வருந்தி அழைத்து ருசி பார்க்க முயலவேண்டும். கூடவே கூடாது.......ஏற்கெனவே பட்ட துன்பங்களிலேயே இதயம் புண்ணாகிப் புரையோடிப் போய் இருக்கிறது. இனியும்....?

புதிய அதிர்ச்சிகளைத் தாங்கிக்கொள்ள நமக்குத் திராணி போதாது என்று நினைத்துக் கொள்வேன்.

காதால் கேட்டது தான் போகட்டும். கண்ணால் பார்த்ததுமா பொய்யாக இருக்கும். பிறன் ஒருவன் தன் மேலாக்கைத் தொடுவதை எந்தப் பெண்தான் பொறுத்துக் கொள்வாளா...கமலா சீ அவள் பெயரை நினைக்கவே நாக் கூசுகிறது என்று நினைப்பேன்,

என் குழந்தையைப் பற்றி நினைப்பேன். மீண்டும் என் உள்ளம் தத்தளிக்கும். மூன்று மாதக் குழந்தையாய் என் முகம் கண்டு அகமலர்ந்து கள்ளமற்ற பொக்கை வாய்ச் சிரிப்பிலே என் கருத்தை அள்ளிய அந்தச் சின்னஞ் சிறு பிள்ளையை நினைத்து மனம் ஏங்குவேன். அந்த அழகிய ஆண் குழந்தைக்காக எதையுமே செய்யலாமே என்று தோன்றும். குழந்தையை அவளிடமிருந்து பறித்துக் கொண்டு வந்து விடவேண்டும். நமக்குப் பிறந்த குழந்தை நாட்டம் பலர் மேல் கொண்டவளிடம் வளர அனுமதிப்பதா கூடவே கூடாது என்று நினைப்பேன். ஆனால் என் நிலைமை நினைவுக்கு வந்துவிட்டால்....? ஒரு கையற்ற முடவன் நான். தன்னைத் தான் காப்பாற்றிக் கொள்ளவே வகை யற்றுப்போய் விட்டவன் நான் அந்தப் பிஞ்சுக் குழந்தையையும் வைத்துக்கொண்டு என்னால் என்ன செய்ய முடியும் என்று யோசிப்பேன்.

சிந்தனைகள் என்னைக்குழப்பிக் கொண்டிருந்தன. எந்தவிதமான முடிவுக்கும் வரமுடியாமல் தடுமாறிக் கொண்டிருந்தேன் நான். சில சமயங்களில் வேதனைகள் என் உள்ளத்தைக் குடைந்து உருக்குலைக்கிற

போது எனக்கு வெறி பிடித்துவிடும். கண்ணுப்பின்னு வென்று எதையாவது செய்வேன். கண்ணை மூடிக் கொண்டு பேயின் வேகத்தில் எங்காவது சென்று மோதவேண்டும் என்று தோன்றும்.

அப்படியில்லா விட்டால் அவ்வளவு வேகத்தில் நான் லாரியை ஓட்டிக்கொண்டுபோ யிருப்பேனு....? நள்ளிரவில்....அதுவும் ஒரு கை இல்லாதவன் நான். அதுவும் கட்டுக்கடங்காத மிலிட்டரி லாரியில்....?

லாரியில் தாவி ஏறும்பொழுது எனக்கு அந்த விதமான சிந்தனைதான் இருந்தது. காற்றின் வேகத்தில்....அதைவிடக் கொடுமையான மின்னல் வேகத்தில் ....லாரியை ஓட்டிச் செல்வது. எதிலாவது மோதி.... எப்படியாவது தலை கவிழ்ந்து நொறுங்கி விழுவது.... அதன் பிறகு....?

லாரி எத்தனை மைல் வேகத்தில் போய்க்கொண்டிருந்தது என்பது எனக்குத் தெரியாது. ஒரு திருப்பத்தில் என் கண் எதிரே ஒரு சின்னக் குழந்தை... சின்னஞ்சிறு குழந்தை அழுதுகொண்டு நிற்பது, தெரிந்தது. என் தலை சுழன்றது. கண்களை மூடிக் கொண்டு 'பிரேக்'கை அழுத்தினேன். லாரி குழந்தைமேல் ஏறி விட்டது மேலும், ரத்தம் தோய்ந்த நிலத்தின்மேல் மாவாக அரைந்து விட்ட சதைப்பிண்டம் ஒன்று கிடப்பது போலும் நினைத்துக் கொண்டேன். மீண்டும் குழந்தையின் அழுகைக் குரல் கேட்ட பின் தான் என்னல் கண்களைத்திறக்க முடிந்தது.

எனக்கு ஒரே ஆத்திரமாக வந்தது. நள்ளிரவில் குழந்தையை நடுத்தெருவில் விட்டு விட்டுப் பெற்றவர்கள் என்னதான் செய்கிருர்கள். இந்தமூட ஜென்மங்களே இப்படித்தான். வகையறியாமல் பெற்றுத்தள்ளி விடுவது. பின் எங்காவது ரோட்டில் விட்டு விட்டுக் கவலையற்றுக்கிடப்பது என்று மனதிற்குள் சபித்துக் கொண்டு கீழே இறங்கி வந்தேன். குழந்தை காரைப் பார்த்துக்கொண்டு வீறிட்டு அழுதுகொண்டு நின்றது.

நான் குனிந்து கையில் எடுத்தேன். அழகான ஆண் குழந்தை....! சுற்றும் முற்றும் பார்த்தேன் பெற்றவர்கள் யாராவது காணப்படுவார்களா என்று? குழந்தையைத் தூக்கிக்கொண்டு நாலாபக்கமும் சற்று தூரம் போய்க்குரல் கொடுத்தும் பார்த்தேன். யாரையும் காணும். எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை இதற்குள் குழந்தை என் கழுத்துப் பட்டையைப்பிடித்துக்கொண்டு விளையாட ஆரம்பித்து விட்டது. நான் அதன் முகத்தைப் பார்த்தேன். அது என்னைப்பார்த்துக்கொண்டு சிரிக்க ஆரம்பித்து விட்டது.

அந்தச்சிரிப்பு என் உள்ளத்தை அள்ளிவிட்டது. அதன் அழகிய சிவந்த முகத்திலே நான் இதயம் பறி கொடுத்து விட்டேன், இனம் தெரியாத பாசத்திலே இளகிநின்ற இதயத்திலே என் குழந்தை என் அருகில் இருந்தால் அது இப்படித்தான் இருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். சாக இருந்து மீண்ட அந்தக் குழந்தையை அங்கே அனாதையாக விட்டுவிட்டுப்போக மனம் வரவில்லை. மீண்டும் சிறிது நேரம் அங்கேயே அதை வைத்துக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தேன். அதைத்தேடிக்கொண்டு வருவார் யாருமே இல்லை. கடைசியாகக் காரில் எடுத்து வைத்துக் கொண்டு ஆபீசை நோக்கித் திரும்பினேன். நான் ஒரு அனாதை. இந்தக் குழந்தையும் ஒரு அனாதை....! அதன் மலர்ச்சிரிப்பிலாவது என் வாழ்க்கை மலர்ச்சி அடையுமா? * * *

## 21. மாணிக்க முதலியார்.

துன்பம் எல்லை கடந்து போய்விட்டால் அதன் பின் என்ன செய்வது என்றறியாத நிலைமை ஏற்பட்டு விடுகிறது. எதுவுமே ஓரளவாக இருக்கிறவரை தான். அதைப்பற்றிச் சிந்திப்பதும் செயலாற்றுவதும் எல்லாம். அளவுக்கு மீறிப் போய் விட்டால்....தலைக்குமேல் வெள்ளம் போய்விட்டால், ஜாண் போனால் என்ன

முழும் போனுல் என்ன என்பதைப்போன்ற நிலைமை தான் ஏற்பட்டு விடுகிறது.

ஆயினும் என்ன? கமலாவைப்பற்றி என்னுல் சிந்திக்காமல் இருக்க முடியவில்லை. அவளுடைய அருமைக் குழந்தை செல்வம் என்ன ஆயிற்ருே என்று நினைத்தால் உள்ளம் திகீர் என்கிறது. நானும் தேடாத இடம் இல்லை. ஏன் தான் துன்பத்தின் மேல் துன்பம் தொடர்ந்து வந்து என்னைத் தாக்குகின்றனவோ....? என்னுலேயே எதுவும் சிந்திக்கக்கூட முடியவில்லை.

பாலு இவ்வளவு கொடியவனுக இருப்பான் என்று நான் நினைத்திருப்பேனு? கடைசி நிமிஷம் வரை நான் அவனை சந்தேகிக்கவே இல்லையே...! என்னுடைய, என் குழந்தைகளினுடைய வாழ்க்கையின் பின்னுல் பாலு எவ்வளவு சதி செய்திருக்கிருன்? என் சொத்துக்களைக் கொள்ளை அடித்தது; ஜாதிப் பிரஷ்டம் செய்தது, என் நிலங்களை ஜப்திக்குக் கொண்டு வந்தது, ரகுவின் வேலையைப் போக்கியது எல்லாமே அவன் தான். ஏன் நடேச முதலியார் மனத்தை மாற்றி விமலாவின் பணத்தை முறித்ததும் அவன் வேலையாகத்தான் இருக்கவேண்டும். முதல் நாள் இரவு அவனும் நடேச முதலியாரும் காரில் சென்றனர் மறு நாள் நடேச முதலியார் என்னிடம் வந்துவிட்டார் உறவை முறித்துக் கொள்ள.

பாலு....நான் அவனை எவ்வளவு நம்பினேன். நல்ல பாம்பிற்குப் பால் வார்த்ததுபோல் நான் அந்த நய வஞ்சகனைப் போற்றிக் கொண்டிருந்தேனே....? நான் அவனுக்கு ஒரு துரோகமும் செய்யாமல் இருந்தும் அவன் ஏன் தான் எனக்கு இவ்வளவு துரோகம் செய்ய வேண்டும்....?

அவனைப்பற்றிய செய்திகள் எல்லாமே திடுக்கிடத் தக்கவையாக இருக்கின்றன. கடைசியாக அவன் தன் நண்பன் சந்திரசேகரைக் கொள்ளையடித்தான்.

அந்த நண்பன் நெடுநாட்களாகவே திருட்டுச் சொத்துக்களைக் கைமாற்றுவதில் இவனுக்கு உதவி செய்து வந்தான்!

இந்தக் கேஸ் எப்படிப் பிடிபட்டது என்பது இன்னும் ரகசியமான விஷயம். யாரோ ஒருவர் விற்கக் கொண்டுவந்திருந்த நகையைப் பார்த்ததும் போலீசாருக்கு சந்தேகம் உண்டாயிற்று. அந்த நகையைப் பற்றி விசாரிக்கையில் அது கேசவலால் நகைக் கடையில் வாங்கியதென்று தெரிய வந்தது. கேசவலால் அந்த நகையை சுதர்சன் பாங்கிலிருந்து ஏலத்தில் எடுத்திருக்கிறான். சுதர்சன் பாங்கின் ஏஜெண்ட் தான் சந்திரசேகர்...! களவும் கைமாற்றலும் எவ்வளவு கோவையாக நடந்திருக்கின்றன?

எது எப்படியோ போகட்டும்? களவு போன சொத்துக்கள் திரும்பக் கிடைக்கும். ஜப்தியான நிலங்களைப் பற்றிய கேஸுகளும் ஜெயித்து விடும் என்று வக்கீல் கடிதம் எழுதியிருக்கிறார். ஆனல் என் மகள் எனக்குக் கிடைப்பாளா? கமலாவையும் அவள் குழந்தையையும் காணப் பெறுவேனு........? விமலாவின் வாழ்க்கை இனி என்ருவது சீர்ப்படுமா....?

நான் துன்பகரமான சிந்தனைகளிலே தேங்கிப் போயிருந்தேன். விமலா கையில் ஒரு பேப்பரை எடுத்துக்கொண்டு வந்தாள். அதில் கமலாவைப்பற்றிய செய்தி ஏதாவது இருக்குமோ என்று ஆர்வத்துடன் எழுந்திருந்தேன். அவள் என் அருகே வந்தமர்ந்து பேப்பரை என் கையில் கொடுத்து ஒரு விளம்பரத்தைச் சுட்டிக் காட்டினுள்.

**யாருமற்ற அனுதையாகப் போய்விட்ட ஏழைக் குழந்தை ஒன்றை அன்புடன் பேணி வளர்க்க ஒரு தாய் தேவை...! வாழ்க்கையிலே சலித்துப்போன, ஒருகையும் இழந்து விட்ட இளைஞர் ஒருவருக்கு அமைதியும், ஆறுதலும் அளிக்கக் கூடிய ஒரு துணை தேவை.**

இரண்டும் ஒரே ஆளானுல் நலம்....!

இந்த விசித்திரமான விளம்பரத்தைப் பார்த்து எனக்கு ஒன்றும் புரியவில்லை. இருளடைந்துபோன அவள் இன்ப முகத்தைத் துயரத்துடன் பார்த்துக் கொண்டு, "என்ன அம்மா....?" என்று கேட்டேன். அவள் கரகரத்த குரலில் கூறினுள், "அப்பா....எனக்கு இந்த உத்தியோகம் பிடிக்கும்" என்று

நெடுநேரம் வரை என்னுல் ஒன்றும் பேச முடிய வில்லை. அவளுடைய தலையை அன்புடன் வருடிக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தேன். என் விரல்கள் நடுங்கிக்கொண் டிருந்திருக்கவேண்டும். என்மகள் வாழ நினைத்தாள். ஆனுல். வாழ்வு அவளை வஞ்சித்து விட்டது. இப்போது...?

"என்ன அப்பா...யோசிக்கிறீர்கள்....? முறிந்து போனஎன் உள்ளத்திற்கு ஒரு குழந்தையின் மலர்ந்த முகம்சிறிதளவாவது சாந்தி அளிக்கும். ஒரு கையையும் இழந்து துன்புற்றுக் கொண்டிருப்பவரை வேறு யார் மணந்து கொள்வார்கள் அப்பா....யாருக்காவது என் வாழ்வால் பயன் இருக்கட்டுமே....? உங்களுக்கும் ஒரு பாரம் குறையும்...." என்ருள் விமலா. நான் அவள் முகத்தைப் பார்த்தேன். என் கண்களில் கண்ணீர் ஊற்றெடுத்து விட்டது. ஒரு தந்தையின் பாசத்தைப் பற்றி இந்த உலகம் எந்த அளவு தெரிந்து கொண்டி ருக்கும் என்பது எனக்குப் புரியவில்லை. ஆனுல்.... நான் என் மக்களை எவ்வளவு அன்புடன், ஆசையுடன் வளர்த்தேன். அவர்களுடைய எதிர் காலம் எப்படி எப்படி இருக்கவேண்டும் என்று திட்டமிட்டேன்? ஆனுல்...என் கண்மணி கமலாவைப்பற்றித் தகவலே இல்லை. இப்பொழுது விமலாவும்...

"அப்பா ஏனப்பா பேசாமல் இருக்கிறீர்கள்....?"

"அப்பா...."

அந்த அழைப்பு என்னை ஆகாசத்திற்கும் பாதாளத்திற்கும் தூக்கிச்சென்றது.

" அப்பா...."

அந்த அழைப்பு என் உணர்ச்சிகளை உலுக்கி உன்மத்தம் பிடிக்கச் செய்தது.

" அப்பா.... அப்பா.... அப்பா...."

எனக்குப் பைத்தியம் பிடித்து விடும்போல் இருந்தது. என் வாழ்க்கையிலிருந்து என் இரண்டு பெண்களும் மறைந்துபோவார்கள். அதன் பிறகு என் வாழ்வும் அஸ்தமித்து விடும். நான் விமலாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் அழிந்து போய் விட்ட ஆசைகளின் மனக்கோட்டைகளின் லட்சியங்களின் பிரதி பிம்பங்களை அங்கே கண்டேன். ஆனால், பேச முடியவில்லை....

" அப்பா...என் வாழ்க்கை கொஞ்சமாவது பயனுடையதாகும். அப்பா...அன்பு கலந்த சேவையில் இன்பம் காண்பேன் அப்பா....என் உள்ளம் சிறிதளவாவது மலர்ச்சி அடையும் அப்பா...யோசிக்காதீர்கள் அப்பா..." என்று அவள் திரும்பத் திரும்பக் கூறினாள். " அம்மா....உன் விருப்பம் அதுவானால்.... அதைத்தடுக்க நான் விரும்ப வில்லை அம்மா....என்றேன். அவள் உடனே புறப்படவேண்டும் என்றாள். நானும் சம்மதித்தேன். * *

22 ரகு.

இந்தக் குழந்தை என் வாழ்க்கையின் போக்கையே மாற்றி விட்டது. அதன் மோகனச் சிரிப்பிலே என் இருண்ட உலகிலே நட்சத்திரப் பூக்கள் மலர்கின்றன. அதன் மழலைப் பேச்சிலே நினைவு மேடையில் வண்ண வண்ண ஓவியங்கள், வேடிக்கைச் சித்திரங்கள் வந்து போகின்றன. எனக்கும் ஒரு குழந்தை இருக்கிறது. அதை எடுத்து அணைக்கவும் இன் முகத்தைக் காணவும் கொடுத்து வைக்காத பாபி நான். இந்தக் குழந்தையை யாவது...?

ஆனல் சில சமயங்களில் இந்தக் குழந்தையின் இயற்கையைப் புரிந்து கொள்ள முடியாமல் திண்டாடி

னேன். அது தூக்கத்திற்கு அழும்போது நான் அதற்கு பாலூட்ட முயன்றேன். அதற்குப் பசித்த பொழுது வேடிக்கை காட்ட நினைத்தேன். குழந்தைகளின் இயற்கையைப் பெண்களால் தான் புரிந்து கொள்ள முடியும்போல் இருக்கிறது. தவிர நம் உத்தியோகத்திற்கும் குழந்தை வளர்ப்புக்கும் ஒத்து வரவில்லை. குழந்தையைக் கவனித்துக்கொள்ள கூலிக்காவது ஆள் பிடிக்கவேண்டும் போல் இருந்தது.

ரொம்பக் கஷ்டப்பட்ட பின்.......நண்பர்களின் ஆலோசனைகளின் பேரில் நான் அந்த விளம்பரம் கொடுத்தேன். அதனுல் எந்தவிதமான பயனும் ஏற்படும் என்று நான் எதிர் பார்க்கவில்லை. முடவனை மணந்து கொள்ள யாரும் விரும்பமாட்டார்கள். குழந்தை வளர்ப்பு வேலை சிலருக்குப் பிடித்திருக்கலாம். ஆனல் தாய் தேவை என்பதல்லவா விளம்பரம். தாயற்ற குழந்தைக்குத் தாயாக இருக்கத் தகுதி உடையவர் அல்லவா வ;வேண்டும்....? அந்தகுதி உடையவர்களாக வந்து வாய்க்க வேண்டுமே...?

நான் விமலாவைப் பார்த்ததும் ஆச்சரியமடைந்தேன். ஆனுல் அவள் குழந்தையைப் பார்த்துச் 'செல்வம்' என்று கூவிக்கொண்டு ஓடி வந்ததும்.... குழந்தை அவளிடம் தாவிச்சென்றதும்....குழந்தையை அணைத்துக்கொண்டு "அத்தான் அக்காள் இங்கே இருக்கிருளா....?" என்று ஆர்வக் குரலிலே அவள் கேட்டதும்.......

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. சிறிது நேரம் சென்றபின் என்னை நானே நிதானித்துக் கொண்டு, "கமலா உங்களுடன்தானே இருந்தாள்...."என்றேன்.

"இல்லை....பத்துப் பதினைந்து நாட்களாக அவளைக் காணும். இங்கும் இல்லையா....? குழந்தை உங்களிடம் எப்படி வந்தது?"

நான் சிறிதுநேரம் யோசனை செய்துகொண்டிருந்தேன். என் உள்ளத்தில் குரூர உணர்ச்சி தாண்டவ

மாடியது. உன் அக்காள் இங்கும் இல்லை. அங்கும் இல்லை. குழந்தை நள்ளிருளில் நடுத் தெருவில் நின்றது என் காரில் அடிபட்டிருக்கும். நல்ல காலம்... தப்பிற்று...

"ஐயோ அப்படியானல் அக்காள்....?

நான் வெறுப்புடன் கூறினேன், "அவள் பாலுவுடன் ஓடிப்போயிருப்பாள்....

மாமா காதுகளைப் பொத்திக்கொண்டு உட்கார்ந்து விட்டார். விமலா கோபத்துடன் பேசினுள். "அத்தான்...என்ன வார்த்தை இது? பாலு ஜெயிலில் இருக்கிருன். அவனேடு உங்கள் தந்தையும், நீங்கள் உத்தியோகத்தில் இருந்த பாங்க் ஏஜெண்ட் சந்திர சேகரும் கூட ஜெயிலில் தான் இருக்கிருர்கள். நம் வீட்டைக் கொள்ளை அடித்தவன் பாலு. உங்கள் உத்தியோகம் போகக் காரணம் பாலு. நடக்கவிருந்த என் திருமணத்தை முறித்தவன் பாலு. கடைசியாக அந்த பாங்க் ஏஜெண்டையும் கொள்ளை அடித்துவிட்டு பொய் கூறி என்னையும் அழைத்துக்கொண்டு ஓடிவிட முயன்றவன் பாலு....அவன் ஒரு அயோக்யன்.... அற்பன். நல்லவன் போல் நடித்துக் கொண்டிருந்த நயவஞ்சகன்....! நல்ல காலம்—நான் அவனை நம்பி மாமாவின் மனதை மாற்றிவிடலாம் என்ற நம்பிக்கையுடன் செல்லவிருந்தேன். அதற்குள் போலீஸ் அவனைப் பிடித்து விட்டது...அத்தான்...அவனுடன் அக்காள் ஓடிப்போகவாவது...? எனக்கு ஒரே புதிராக இருந்தது.

அதற்குள் வேறு ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு வாலிபனும் அவனுடைய கிழத்தந்தையும் இறங்கினர். அவர்களோடு இறங்கிய பெண்....

கமலா....!

அவளால் என்னைப்புரிந்து கொள்ள முடியவில்லை. என்னுலும் அவளைப்புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் உடம்பெல்லாம் கட்டுக்கள்! மெதுவாக அந்தக்

கிழவரின் தோளைப் பிடித்துக்கொண்டுதான் அவளால் நடக்க முடிந்தது.

அந்த இளைஞன் விமலாவிடம் ஏதோ கூறினன். அவள் 'அக்கா...." என்று கூவிக்கொண்டு ஓடிப் போய் அவளைக்கட்டிக்கொண்டு "அதோ அத்தான்" என்ருள். அவள் என்னைப்பார்த்தாள். அப்படியே மூர்ச்சையாகி விட்டாள், நான் திடுக்கிட்டு எழுந்தேன். அப்பொழுதுதான் என்னிடத்திலிருந்து காணுமல் போய்விட்ட ஒரு கையின் விபரம் மற்றவர்களுககுத் தெரிந்திருக்கவேண்டும். கமலாவின் மூர்ச்சையைத் தெளிவிப்பதை விட்டுவிட்டு அவர் என் கையைத் தேடிப்பார்க்கிருர். விமலா கண்ணீர் வடிக்கிருள்.

கமலா என் மடியில் படுத்துக்கொண்டு முடமாகிப் போன என் கையை வருடிக் கொண்டு தன் கதையைச் சொல்கிருள். என்னை அறியாமல் என் கண்களிலிருந்து கண்ணீர் வழிகிறது. கண்ணீர்க் கறை படிந்த எங்கள் சோக சரிதம் எத்தகைய கன் நெஞ்சத்தையும் கரைத்து விடாமல் போகாது. இங்கே.... நானும் என் மனைவியும் கண்ணீர்க் கடலில் மிதந்து கொண்டிருக்கிருேம். அங்கே அடுத்த அறையில் சிரிப்பொலிகள் கேட்கின்றன.

முதலில் சிரிப்பவள் விமலா....

அடுத்தது சபேசன்...

இன்னும் ஒரு சிரிப்பொலி...! எங்கள் குழந்தையினுடையது. எங்கள் உள்ளத்திலும் சிரிப்பு மலர்கிறது. இத்தனை காலம் சீரழிந்தோம். இனிச் சிரிப்போம்.

அதோ....எங்கள் செல்வம் மீண்டும் சிரிக்கிறது. சிரித்துச் சிரித்து மகிழ்கிறது. நான் கமலாவின் முகத்தைப் பார்க்கிறேன். அவள் என் முகத்தைப் பார்க்கிருள். நாங்கள் சிரிக்கிருேம்....வாழ்க சிரிப்பொளியே வாழ்க....! இன்பத்தின் எதிரொலியே வாழ்க....! வாழ்க்கையின் இன்ப நாதமே வாழ்க...! வாழ்க....! வாழ்கவே....!

முற்றும்.